323

உ

" *Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End.*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1906-ம்வரு மார்ச்சிமீ. [சஞ்சிகை 11.

# LORD AMPTHILL=A TOUCHING FAREWELL.

"GOD BLESS YOU & YOURS, TRUE SON OF GREAT BRITAIN."—*Madras' Parting Wish to Her First Citizen & Governor.*

" For myself, I trust that I may be permitted to say this: Queen Victoria appointed me to be Governor of Madras and I have still ringing in my ears Her Majesty's parting injunction to me to be kind and sympathetic towards the people of this country. I shall never forget that command of Her Majesty."—*Speech at the Victoria Memorial Hall ceremony.* (Laying the Foundation Stone by T. R. H.)

" In one of my first utterances five years ago I claimed to be regarded as a citizen of Madras and said I looked forward to making Madras my home for a time and taking my full share of duties and responsibilities as a citizen of this beautiful and famous town. Looking back upon the time that has passed, I can honestly say that Madras has been a home to my family and me, a home in which we have been exceedingly happy and of which we have been altogether proud.

........We are leaving Madras with mingled feelings, for we have many reasons for desiring to return to our own home, but I can assure you that the regret which now fills our hearts will long endure. We shall often wish ourselves back in Madras in the years to come. The gloom of London will, I know, often make us sigh for the bright sunshine, the clear air, and the blue sea of Madras."—*Farewell Speech at the Banqueting Hall.*

The Editor of this Journal having conveyed to His Excellency Lord Ampthill, the genuine and heartfelt sentiments of the people towards him for his sincere love and sympathy, has received the following kind and appreciative acknowledgment of His Excellency through his Private Secretary:—"I am desired by His Excellency to thank you for the kind expression contained in your letter of the 10th which he greatly appreciates. He desires me also to thank you for the 'Royal Visit' number of the *Viveka Chintamani* which you have kindly sent."

# உத்தம சித்தமுள்ள உண்மையான கவர்னர்.

## லார்ட் ஆம்ப்தில் அவர்கள் பிரயாணம்.

### உள்ளமுருகக் கள்ளங்கரையக் கனிமொழிகூறிச் சென்றார்.

---

சென்ற ஐந்து வருஷகாலமாக இவ்விராஜதானியை ஆண்டுவந்த நமது கவர்னர் லார்ட் ஆம்ப்தில் பிரபு சென்றமீ 14௳ புதன்கிழமை சாயந்திரம் அவருடைய வேலையைவிட்டுச் சீமைக்குப்போகப் பிரயாணமானார். போகுமுன் சென்னை முனிசிபல் கமிஷனர்கள் அவருக்கு ஒரு வந்தனோபசாரப் பத்திரம் வாசித்தளித்தார்கள். அதற்கு ஒரு வாரத்துக்கு முன்னம் சென்னை இராஜதானி ஜனங்கள் அவருடைய மேலான குணத்தை நன்கு மதித்துக்கொண்டாடுவதற்கறிகுறியாக அவரையும் அவருடைய பத்னியார் லேடி ஆம்ப்தில் அவர்களையும் அழைத்து விருந்து வேடிக்கைகளாலுபசரித்துக் கொண்டாடினார்கள். அப்பொழுது ஸர் எஸ். சுப்பிரமணிய அய்யரவர்கள் அவருடைய மேன்மைக்குணங்களைச் சொல்லி ஹிருதய பூர்வகமாக அவர் உண்மைக்குணத்தையும் நற்சிந்தையையும் இந்தியர்களெல்லாரும் "தோட்டிமுதல் தொண்டைமான் வரையில்" கொண்டாடுவதைச்சொல்லி அவருடையவும் அவருடைய தேவியார் லேடி ஆம்ப்தில் அவர்களுடையவும் முழு உருவப்படமொன்றெழுதி பாங்குவெட்டிங் ஹாலில்வைக்கத் தீர்மானித்திருப்பதைத் தெரிவித்து அதற்கு அவர்கள் இணங்கவேண்டுமென்றும் அந்த மாதிரிப்படமொன்று அவர்கள் சென்னையிலிருந்த காலத்தில் இவ்விராஜதானி ஜனங்களுக்கும் அவர்களுக்குமுண்டாயிருந்த ஹிருதய பூர்வமான அந்நியோந்நிய நேசத்துக்கு அறிகுறியாகக் கொடுக்க நினைத்திருப்பதை யேற்றுக்கொள்ள மனமுவக்க வேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டார். கனம் பொருந்திய லார்ட் ஆம்ப்தில் அவர்கள் அதற்கிசைந்து மறுமொழி கூறினதில், சென்னை இராஜதானிக்கு அவர் கவர்னராக வந்ததுமுதல் இவ்விடத்து ஜனங்களில் தாமும் ஒருவராகவிருந்து உண்மையாக உள்ளபடி சென்னையையும் சென்னைவாசிகளையும் அவர் நேசித்துவந்ததையும் அவர்களிடத்து அவருக்குண்டான அன்பையும் உள்ளமுருகக் கள்ளங்கரைய உள்ளபடி சொல்லிப்பேசினார். இதுவரையில் இவ்விராஜதானிக்கு கவர்னராய் வந்தவர்களில் எத்தனையோ பேர்கள் நல்லவர்களிருந்திருக்கிறார்கள். ஆயினும் ஸர் சார்ல்ஸ் டிரிவேலியன், ஸர் தாமஸ் மன்ரோ, இவர்களுக்குப்பிறகு இவர்களைப்போல் ஜனங்களோடு நேரில்கலந்து பழகி அவர்களிடத்து உண்மையான உள்ளன்பு வைத்துழைத்தவர் வேறு ஒருவருமில்லையென்று சொல்லும்படி அவ்வளவு அபூர்வமாகவிருந்தது இவருடைய உண்மைக்குணமும் உள்ளன்பும். உத்தியோக முறையில் ஜனங்களுக்குப் பிரியமானதும் அப்பிரியமானதுமான காரியங்கள் ஏதேதோ செய்திருக்கலாம். ஜனங்கள் எல்லாருக்கும் எப்போதும் ஹிதமே செய்துவரும் பாக்கியமும் அதற்கேற்ற சந்தர்ப்பங்களும் எல்லாருக்கும் இலகுவில் நேர்கிறதில்லை. ஆதலால் ஒருவர் நாடாளுந்தொழிலில் செய்த செய்கைகளை ஒவ்வொன்றாக ஆராய்ந்தால் நல்லதும் பொல்லாததுமாக நாலுபேர் நாலுவிதமாகச் சொல்லும்படித்தானிருக்கும். ஆனால் நாம் கவனிக்கத்தக்க தென்னவென்றால் அவர் உள்ளக்கருத்தும் உண்மைக்குணமும் எப்படியென்று பார்க்கவேண்டும். ஜனங்களிடத்து உண்மையான பிரீதியும் உள்ளன்புமுடைய

வர் ஜனங்களுக்கு வேண்டுமென்று மனப்பூர்வமாய்க் கெடுதிசெய்யார். ஆனால் மனுஷயத்தனம் சுபாவமாகவே குறைகுணமுள்ளதாகையால், அவர் செய்கைகள் முன்னுக்குப் பின் வித்தியாசம் விளைப்பதற்குக் காரணமாக விருக்கலாம். உள்ளக்கருத்தும் நேராகவிருந்து உள்ளன்பும் உண்மைக்குணமும் கூடவிருந்துவிட்டால், அவருடைய குற்றங்களைப் பெரிதாகப் பாராட்டமாட்டார்கள். இவர் கவர்னராக நியமிக்கப்பட்டு சென்னைக்குப் புறப்பட்டு வருமுன் மாக்ஷிமைதங்கிய நம் விக்டோரியா சக்ரவர்த்தினியார், இவருக்கு விடைகொடுத்தனுப்புகையில், ஜனங்களிடத்தில் அனுதாபமும் ஆதரவுமாயிருந்து அரசாக்ஷிசெய்து வருகவென்று ஆஜ்ஞாபித்தருளினராம். அந்த ஆஞ்ஞையைச் சிரமேல்வகித்து அவருடைய வாக்குக்குக் குறைவுவராதபடி நடந்துகொண்டது மிகவும் கொண்டாடப்படத் தக்கதே. எந்த விஷயத்திலும் ஜனங்கள் குறைகளை நேரில் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற எண்ணமும், அவ்வெண்ணத்துக்கேற்ற முயற்சியும் ஊக்கமும் இவரிடத்தில் அதிகமுண்டு. ஆசாரச்சீர்திருத்த விஷயங்களைப்பற்றி யொருவர் இவரிடம் வற்புறுத்திப்பேச, அது விஷயமாக எல்லாவற்றையும் தானறிந்துகொள்ள வேண்டுமென்று தெரிவித்தார். குடிகளுடைய குறைகளை நேரில் தெரிந்துகொள்ள வேண்டுமென்று அவர்களோடு கலந்துபேசி அவர்கள் மனக்குறைகளை யுள்ளபடியுணர யத்தனித்தார். மதவிஷயமான சன்மார்க்க போதனையின்றி சிறுவர்கள் மதிகெட்டுப் போகிறார்களென்பதை யுணர்ந்து அது விஷயமாய்த்தமது மேலான அபிப்பிராயத்தைப் பலதடவைகளில் வற்புறுத்திக் கூறினார்.

பள்ளிப்பிள்ளைகளுக்கு மதாபிமானமுண்டாக சன்மார்க்கபோதனை செய்வது சாத்தியமென்று காட்ட இடைவிடாது இவ்விவேகசிந்தாமணியில் சென்ற 5-வருஷகாலமாக எழுதி வந்ததை யாவருமறிவார்கள். "கடவுளை வழிபடும்" வழிகாட்டி 1903-வது வருஷத்தில் 'ஆத்மவித்தியாமஞ்சரி-ஆனந்தத்தாய்மொழி' யிவையடங்கிய விஷயத்திரட்டு ஒன்று பதிப்பித்தோம். பின்னர் கிண்டர்கார்டன் முறையை யனுசரித்துப் "பிரகிருதியினுண்மையில் பரமனைகாணலாம்" என்கிற இரண்டாவது விஷயத்திரட்டும்; சென்றவருஷம் மதிவளர் வித்தையென்னும் ஸ்ரீவித்தையைப்பற்றி யெழுதிவந்த விஷயங்களைத்திரட்டி, மூன்றாவது விஷயத்திரட்டாகவும் சேர்த்துப் பதிப்பித்து அவர் சென்னையைவிட்டுப் போகுமுன் அவருக்கனுப்பலானோம். ஆத்மவித்தியாபோதனா விஷயத்தில் கவர்ன்மெண்டார் செய்யத்தக்கது விசேஷமாகவொன்றுமில்லை. இப்பொழுது அதற்கு விரோதமாகவுள்ள சில இக்கட்டுகளை நீக்கி அதன் அவசியத்தை அறிந்தேற்றுக்கொண்டு அதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்படுவதற்கனுகூலமாக விருக்கவேண்டியதே யவர்கள் செய்யவேண்டிய கடமை. ஜனங்களின் ஆத்மக்ஷேமத்தைப்பற்றி முக்கியமாய் ஜனங்களில் சன்மார்க்க சிரேஷ்டர்களாயிருப்பவர்களும் ஆத்மானந்த அனுபவிகளாயிருப்பவர்களுமே கங்கணங்கட்டியுழைக்கவேண்டும். நமக்குள் இக்காலத்தும் ஆத்மஞானிகள் அங்கங்கே யிருக்கிறார்கள். அவர்களை வழிபட்டு அவர்கள் உபதேசிக்கும் உண்மையை யுள்ளபடி யிருந்துணர்ந்து அனுஷ்டிக்கும் சற்சீஷர்தான் அருமையாக விருக்கிறது. அப்படிப்பட்ட பெரியோர்களையடுத்து ஏதோ நாம் கிரகித்துக்கொண்ட அளவு கள்ளங்கபடின்றி உண்மைக்குப் பங்கம்வராது சொல்லக்கூடியதைச் சொல்லிவந்தோம். ஜனசிரேஷ்டர்களாகவும் ஜனசமூகத்தலைவர்களாகவுமிருப்பவர்

கள் இதில் உள்ளபடி புகுந்து உண்மையாகவுழைத்துப் பாடுபட்டாலன்றி ஜனங்கள் சீர்திருந்தி முன்னுக்கு வருவது கஷ்டம். "மதியால் விதியையும் வெல்லலாம்." ஆகையால் "மதிவளர்வித்தையால்". உண்மைக்குணமும் உள்ளன்பும் விவேகமும் வளர்ந்து முதிர்ந்து வர நாமுழைத்துவரவேண்டும். வாசாவேதாந்தத்தால் ஒன்றும் ஆகாது. "வேதாந்த சித்தாந்த சமரஸ நன்னிலைபெற்ற" பெரியோரைவழிபட்டு உண்மையாக நின்று உள்ளபடி உழைக்க வேண்டும். இப்படி உழைப்பவர்கள் எல்லாவிதத்திலும் முன்னுக்கு வரலாம். மூளை சாமர்த்தியத்தோடு ஹிருதயவுண்மையும் வேண்டும். இவ்விரண்டும் சரிசமமாகக் கலந்து "தராசுமுனைபோல்" நின்றால்தான் சத்குணசம்பத்தும் ஸதாவிர்த்தியுமுண்டாகும். சத்குணசம்பத்தின்றி ஸதாவிர்த்தியில்லையால் நம்மவர்கள் நமது பூர்வீக ஆரியர்களின் மேலான ஸநாதன தர்மத்தை யனுஷ்டித்து சத்குணசம்பத்தைப் பெறல்வேண்டும். சத்குணசம்பத்துண்டானால் மற்ற எல்லா பாக்கியங்களும் தானேயுண்டாகும். இந்தவுண்மையின் உள் இரகசியத்தை நமது கவர்னராயிருந்த ஆம்ப்தில் பிரபு அவர்கள் தம்முடைய சத்குண சம்பத் விசேஷத்தால் இயல்பாகவே யறிந்தொழுகுபவராயிருந்தார். இதனால்தான் அவரிடத்து ஏழை எளியவர் முதல் ராஜாக்கள் வித்வான்கள் வரையில் எல்லாரும் உள்ளன்பு பாராட்டும்படி நேரிட்டது. அவரிடத்துக் குற்றங்குறைகூறிப் புறம்பேசி வந்தவர்களுங் கூட தம்மையன்றி யவரிடத்து அன்பு பாராட்ட நேரிட்டதென்றால், அவருடைய உண்மைக் குணத்தையும் உள்ளன்பையும் பற்றிப் பின்னும் மெச்சிமெச்சி யெழுதுவானேன்! உள்ளத்தைக்கவர உண்மையான உள்ளன்பைப்போன்ற மருந்து வேறில்லை இந்த இரகசியத்தை ஆத்மஞானிகளும் யோகிகளும் வகையறிந்துபயோகித்து எல்லாரையும் தம் வசப்படுத்துவார்கள். லார்ட் ஆம்ப்தில் அவர்களோ, இயற்கையாக அமைந்த உண்மைச்சுபாவத்தால் எல்லாரிடத்தும் உள்ளன்புவைத்து எல்லார்மனதையும் கொள்ளைகொண்டு போய்விட்டார் கடையரும் கசடரும் கல்லாலும் சொல்லாலும் வரும் கௌரவத்தைப் பார்ப்பார்கள். உத்தமர் உள்ளன்பால் உள்ளத்தைக் கவர்ந்து எல்லார்மனதையும் கொள்ளைகொண்டு மாண்புற்றிருப்பார்கள். இவ்விருவகை மாட்சியில் பின் சொன்ன பெருமித மாட்சிபெற்ற லார்ட் ஆம்ப்தில் அவர்களுக்கு ஜனங்கள் சொல்லாமற் சொல்லி விள்ளாமலுள்ளத்துணர்ந்து நிறைந்ததோர் ஆசிவசனத்தை எழுகாக்ஷரம் வாசித்தெழுத அவரும் உளம்கனிந்து மனம் பூரித்தவராய் அதையுள்ளபடி யுணர்ந்தேற்றுமகிழ்ந்ததை நம் விவேகசிந்தாமணியை வாசிப்போர் மனமுவக்க இதன் முகட்டில் அச்சிட்டிருக்கிறோம். அவர்கள் பேரால் அவர்கள் ஹிருதய பூர்வகமான எண்ணத்தை வெளியிட்டெழுதியதை யங்கீகரித்து மதித்து கனம் பொருந்திய கவர்னர் அவர்கள் விடுத்ததோர் நயமுறுலிகிதத்தை வெளியிட்டு, 'இராஜதம்பதிகள் விஜய' மானதைக்குறித்து வெளியிட்ட சென்ற மாசத்து விவேகசிந்தாமணிப்பிரதி யொன்றயனுப்ப அதையுமவர் மனமுவந்தேற்றுக்கொண்டதற்காக அவருக்கு வந்தனமும் கூறுகிறோம். "அம்பரம் வாழ்க" வென்றாசீர்வதித்ததோர் ஆனந்த மூர்த்தியை வழிப்பட்டு "உத்தம சித்தமுள நம்முண்மைக்கவர்னர் தம் சுற்றமுடன் நித்தமும் வாழி வாழி" யென்றொருவர் கூறிய ஆசிவசனத்தோடிதை முடிப்போம்.

ஓம் தத் ஸத்.

## "PULL TOGETHER" AND "HAVE YOUR EYES IN THE BOAT."

"It is not enough for you to work for the material improvement of the city and the good of the ratepayers in improving sanitation and drainage, water-supply and lighting, in building new hospitals and in opening out congested areas. There is a higher ideal which I would put before you in these my last words of farewell. Strive to show by your conduct of Municipal Administration that European and Indian can work together harmoniously for the public good even when their mutual relations are not defined and regulated by official discipline. Let it be your aim in all loyalty and forbearance to discharge the great trust committed to your care, so that the ideal which I put before you may be realised and that Madras may set an example of Municipal Self-Government to the rest of India.........

"Pull together", and "keep your eyes in the boat." Pull together then! that is, work harmoniously and with no thought for anything except the smooth and rapid progress of the boat. There is no question of individual prominence in a boating crew, it is the appearance of the crew as a whole and its pace that is regarded. And keep your eyes in the boat! If you look out to see what the people on the river-banks are thinking of you or to listen to their exhortations you get out of time and the boat becomes unsteady and looses pace."—*Lord Ampthill's Farewell Speech at the Banqueting Hall.*

## கண்ணும் கருத்தும் ஒண்ணாயிருந்தால் காரியமெல்லாம் கைகூடும்.

கனம் பொருந்திய லார்ட் ஆம்ப்தில் அவர்கள் சென்னையைவிட்டுப் போகுமுன் சென்னை முனிசிபல் கமிஷனர்கள் மூலமாக நமக்கு ஒரு நல்லபுத்திமதி சொன்னார். அது அவர் சுதாவாக நினைத்து அவருடைய அநுபவத்திலிருந்து சொன்னதானாலும் அது உற்று நோக்கில் உண்மையான ஒரு ஸநாதன ஸத்போதனையாயிருப்பதால் அதைப்பற்றிச் சற்று விவரித்துச் சொல்லுவோம். சென்னை முனிசிபல் கமிஷனர்களை நோக்கி அவர்கள் நகர் சீர்திருத்தத்தை மட்டும் கவனித்து வந்தால்போதாது. ஆனால் ஐரோப்பியரும் இந்தியரும் மனது கலந்து ஒருமித்துப் பொதுவிஷயத்துக்குழைக்கக் கூடும், உழைக்க வேண்டும், உழைத்துவருகிறார்கள் என்பதை நிதரிசனமாக நடத்தையில் மூதரித்துக் காட்ட வேண்டுமென்று சொன்னார். இது ஒரு மிகவும் மேலான உத்தமபுத்திமதி. இது இந்தியர்களுக்குமட்டும் சொன்னதன்று; ஐரோப்பியர்களுக்கும் கூட சரியே. இந்தியாவின் க்ஷேமத்துக் குழைக்கவேண்டுமானால் ஐரோப்பியரும் இந்தியரும் மனம்கலந்து ஒருமித்து ஏகிபாவமாகவுழைத்தால் தான் காரியம் கை கூடி நிறக்கும். ஐரோப்பியர்களிடத்தில் சில உத்தம குணங்களிருக்கின்றன; இந்தியாகளிடத்தில் சில உத்தமகுணங்களிருக்கின்றன. இவ்விரண்டும் சேர்ந்தால் தான் எந்தக் காரியமும் இனிது முடியும். இவ்விருவர்களில் ஒவ்வொருவர் குறை நிறைகளுக்கு மற்றவர்கள் குறை நிறைகள் கட்டுக் காவலாகவும் ஒட்டுதவியாகவுமிருக்கிறது. இதை இருவகுப்பாரும் உள்ளபடியுணர்ந்து ஒருவரை யொருவர் மதித்து ஒவ்வொருதரத்தாரும் மற்றத்தரத்தாரிடத்துள்ள குணத்தைக் கிரகித்து குற்றத்தைத்தள்ளி யொத்துழைக்கக் கற்றுக்கொள்ளல்வேண்டும். ஜாதிமத வருண பேதங்களாலும் தேசகால வித்தியாசங்களாலும் பேதப்பட்ட இருவகையார் என்னமாகச் சேர்ந்துழைப்பது சாத்தியமாகு மென்றால், அதற்கும் உபாயம் அவர் சொல்லுகிறார். படகு தள்ளும்போது எல்லாரும் ஒத்துத் தள்ளினால் தான் படகு சுலபமாகவோடும். அஃதோடு படகு தள்ளுவோர் எல்லார் கண்ணும் கருத்தும் படகின்மேலிருக்க வேண்டும். அதுசரியாகப் போகிறதா

வென்கிற ஒன்றைத்தவிர வேறு எதையும் நினைத்து மனம் கலவரப்படலாகாது. மனது கலைந்தால் செயலும் கலைந்து பங்கப்படும். "ஏகீபாவம்" "ஏகாக்கிரசிந்தை" என்கிற இரண்டும் ஒரு காரியத்தில் ஜயமடைவதற்கு இன்றியமையாச் சாதனங்களாம். "ஏகீபாவம்" என்பது மனமொருவழிப்பட்டு அந்த வழிதப்பி விலகாது எதுவரினும் அவ்வழியே பற்றிநிற்கும் தன்மையை யுணர்த்தும். மனது முன்னும் பின்னுமாகச் சலித்தால் அதற்குவலி குறைந்து போகிறது. "ஏகாக்கிர சிந்தை" என்பது ஒருவழிப்பட்ட மனது அந்த வழியிலேயே மேன்மேலும் தொடர்ந்து செல்வதாம். "ஏகீபாவத்தால்" மனவலியும், "ஏகாக்கிரசிந்தையால்" வலுப்பட்ட மனதைச்செலுத்தும் சக்தியும் உண்டாகிறது. ஏகீபாவத்தால் மனம் குண்டுபோலாகிறது. "ஏகாக்கிரசிந்தையால்" அக்குண்டைப் பீரங்கியில் போட்டுச்சுட்டால் அது எப்படி சக்தி நிறைந்து எதிர்ப்பட்ட எதையும் தகர்த்துக்கொண்டு செல்லுமோ அப்படி மனதைச் செலுத்தும் இஷ்டசக்தி விசேஷமாயுண்டாகிறது. குண்டும் பீரங்கியும் எப்படி ஒன்றுக்கொன்று உதவியாயிருந்து காரியத்தை முடிக்கிறதோ அப்படிப்போல "கண்ணும்"= மனக்கண்பார்வையாம் "பாவனை" கலையாத நோக்கமும் (ஏகீபாவமும்), "கருத்தும்" =அந்த "பாவனை"மாறாது மேன்மேலும் அதே சிந்தனையில் மனது தரித்துநிற்பதற்குச் சாதகமான "ஏகாக்கிரசிந்தையும்", "ஒண்ணுயின்"= ஒன்றுபட்டு சாதக சாதன முறைபற்றி ஒத்துவரின், "காரியமெல்லாங் கைகூடும்" = தொடுத்த எந்தக் காரியமும் விக்னமின்றி நிறைவேறும்— என்பது ஒரு மேலான மனோதத்துவத்தை யுணர்த்தும் உண்மையாம். இதைத் தத்துவபரமாகவெடுத்துச் சொன்னால் யோக பரிபாஷையில் "எதையும்அசமுகப்பட்டு தியானதாரண சமாதியாலுணர்ந்து சாதித்தால் சாதிக்கலாம்: யோகஸம்யமத்தினால் எப்படிப்பட்ட அரியகாரியமும் கைகூடும்" என்று சொல்வார்கள். லார்ட் ஆம்ப்தில் அவர்கள் யோகியாகவின்றி படகு செலுத்துவதில் பழகிப் பிரக்கியாதிபெற்றவராயிருந்ததால், அந்த வழியில் காரிய சாதனத்துக்கனுகூலமானதோர் மனோதத்துவத்தைக் கிரகித்து அதை ஸ்தானீகசுய ஆக்ஷி விஷயத்துக்குப் பொருந்தப் பொருத்திச் சொன்னார். "ஊர்கூடி வடம்பிடித்தாலன்றி தேர் நிலைக்கு வராது" என்கிற உண்மைதெரிந்தவர்களுக்கு "ஏலகொத்தா, ஏலமண்ணு! என்று எல்லாரும் ஒரு மூச்சுப்பிடியுங்கள்" என்று சொன்னால், அவர்கள் மூக்கைப்பிடித்துக்கொண்டா நிற்பார்கள்? இல்லை! மூச்சைப்பிடித்துக்கொண்டு வடத்தைப் பிடித்து ஒரு மனதாயிழுப்பார்கள். அப்படிப்போல படகு செலுத்தும் வேலையில் பழகின அவர் அந்த விளையாட்டின் பரிபாஷையில் ஒரு மனோதத்துவத்தை யெடுத்துச்சொன்னால் அதையறிந்து கொள்ளமாட்டாமல், "நீ யென்ன புத்தி சொல்லுகிறது!" என்று கோபித்துக்கொண்டால், அவர்களை என்னென்று சொல்கிறது! மனோதத்துவம் உபாதிரகிதமாய் நிற்கில் அதை யுணர்வது சாமான்ய ஜனங்களுக்கு சாத்தியமில்லை. உபாதிசகிதமாக அதைச் சொல்லவேண்டுமென்றால் ஏதோ ஒரு கிரியாசம்மந்தமாகவுள்ளபரிபாஷையில்தான் அந்த உண்மையையுணர்த்தலாம். உபாதிசகிதமாய்ச் சொல்லினும் (உபமானமூலமாக விளக்கினும்) உணராது, உபாதிரகிதமாக (தத்துவபரமாக) வுண்மையையுணரவும் சக்தியில்லாதவர்களுக்கு புத்திசொல்லப்போனால், புன்மொழியும் பொய்வார்த்தையும்தான் கிளம்பும். இதையறிந்தே மூதறிஞர்மௌனம் சாதிக்கின்றார்கள். விஜ்ஞான புருஷர்கள் வாயிலிருந்து வார்த்தையை விட்டு வம்புவிளைத்துக் கொள்கிறார்கள். ப்ரஜ்ஞான தீரர்களோ மௌனம் சாதித்துப் பக்குவமறிந்தே பசிக் காரியத்தை முடித்துக்கொள்கிறார்கள்.

# GODWARD HO! A SYMPOSIUM

## *Foreward to Second and Third Series.*

### RELIGIOUS EDUCATION IN SCHOOLS.

[*From the "Hindu." of 13th February 1906.*]

Sir,—The thanks of the thinking public are due to you for your article in the *Hindu* on the above subject, thus helping to keep the question well to the fore. It is now five years since I earnestly took up the question and have dealt with it in a practical way in the *Vivekachintamani*, collecting the various articles on the subject in a series of symposiums under the head "Godward Ho!" the first of which I issued in 1903. As I wrote in the *Hindu* in my letter of 23rd November 1903, I made it clear "that moral charact er to be enduring and uplifting must necessarily be based on an essentially religious foundation," wiich proposition is now admitted on all hands; and I further pointed out, "The remedy is not in the teaching of this religion or that religion dogmatically, but in so aiming to touch the soul as to awaken it—by what means or methods it is immaterial." I then wished to confine myself to a discussion of the broad principles, without getting myself involved in smaller details. Since then the subject has received the careful attention of all leading men among us who have given any deep thought to the question of moral education or the formation of good character among our school-going children. The *Educational Review* published a series of articles on the subject which was headed by a brief but telling letter from Dr. Guroo Dass Banerjee of Calcutta, who has since treated of the whole question of Education in his published work "A few thoughts on Educatieon" in a masterly way, touching briefly on the points that need consideration. The following head lines of points discussed in this suggestive work will be found instructive to the general reader who can think for himself and compare notes with the author and other thinkers who have given expression to their opinions. Under the head of "Moral Education," Dr. Banerjee drives home to the reader's mind the following axiomatic truths, *viz.*, "Moral Education should begin early; (2) By repetition of simple precepts; (3) By illustration of their meaning; (4) By reducing precepts to practice; (5) Evil environments to be avoided; (6) Emulation to be encouraged cautiously—False fear not to be excited; (7) Teaching by example more needed than teaching by precepts." Discussing the need of Religious education, he says, that Religious education should begin early from infancy, and that it is not to be omitted because of its dfficulty. The Home, should, of course, take a prominent part in the moulding of the infant mind, but the teacher is not absolved from his duty. He ably dircusses the subject in a separate section devoted to it and comes to the conclusion that "Religion like morality is to be practised, not merely to be professed, and practised, not merly in the sense of observing certain forms and formalities, but in the sense of moulding all action, and the whole life according to it. The pupil should be told with all the earnestness of which the teacher is capable, to remember that God is with him everywhere and at all times and that everything is in him." He quotes the well-known text of the Gita, "He who sees me everywhere, and everything in me, never loses me and I never lose him," and urges the necessity of impressing on the young minds the Omnipresence of God and the necessity of a living Faith in him. Of course, controversial points have to be avoided. "Religion," as defined by a German authority, "means the conscious relation between man and God, and the expression of that relation in human conduct." A finer definition, as I pointed out, would be, by substituting *motive* for *conduct* in the above definition. For *motive* is the root of action and where the *motive* is correct, the expression of that motive in actual life, which is *conduct*, would and must also be correct. It is merely a matter of Psychic Law working itself out from above downwards.

Germany, it appears, has solved this knotty question of Religious Education in Schools, in a way quite satisfactory to itself, and an English writer (Mr. T. C. Horsefall) in the *Spectator*, opines that "the German system is the only one from which the best educational results can be obtained." In describing the system, the writer in the *Spectator* says:—"The Best German Christian Thinkers are convinced that religious and so-called 'secular' instruction cannot be separated without injury to both;" and to solve the difficulty of giving religious instruction to followers of diametrically opposed views and warring creeds, they have adopted the system of denominational schools or denominational division of labour in giving religious instruction,—giving entire and full discretion to parents as to what religion or creed their children should be brought up in. This can still further be improved, if only we could find the right and practical Teachers who have made "the realisation of Truth, the practical aim of their Life"—for the principles are all the same and their application to life according to the different creeds is easy enough when once the "First Principles" are fully and fearlessly grasped. "Realisation of truth," to quote another great authority (*Schiller*), "is rather a process than a dogma." You can't define it in cut and dry phrases, but you can perceive and act up to it in all ways. This is the secret of the Great Teaching which the Gita expounds in various ways to suit various minds that may follow different "processes" but all to reach the same "End."

Having had the great good fortune to come into living personal contact with a "realised soul," I was able to follow up the Path shown me by my spiritual guide and verify the truth of the above by personal experience. Having followed my Teacher up to the very goal, I took up the clue and retraced my steps in various ways.

I have reduced them to writing under the head "Gleanings on the Way" bnt they are more or less in the form of rhapsodies and could be of immediate practical use only to those who are on the Path and struggling to reach the Goal. To serve the purpose now under discussion, I took up the question from the stand-point of Freidrich Froebel, the Father of the kindergarten method of Teaching and pursued it to the end; collecting the Essays in a "Second Series of Symposium" entitled "Through Nature to God," which is now ready for issue. Having thus reached the Goal, pursuing the "objective method" (represented by Pestalozzi) I took up the cue again and followed it from a subjective point of view making what the Americans call "Character-Building" as the true basis of National Education. I gave a skeleton of the line of thougt I then intended to pursue in an article entitled "Character-Building, as the true Basis of National Education." which appeared in the "*Hindu*" of 25th July 1905. I have since followed up the subject in greater detail and have collected the series of articles by which I reached the final Goal again step by step in a "Third Series of Symposium" whih is now ready to be issued under "SRIVIDYA" or "The Holy Science of Character-Building." The question has thus been threshed out in different ways and the text books on Sanatana Dharma, which the Trustees of the Central Hindu College have brought out, (a Tamil Translation of the most important of the series by Mr. P. Narayana Iyer of Madura has recently appeared), however capable of further improvement, will show one a practical and ready-made way to start with. The question attracted the attention of His Excellency Lord Ampthill, whose Private Secretary wrote to me in 1903, that he would place the matter before His Excellency, but nothing practical came of it, except a declaration of His Excellency's own opinion on the great question that was then receiving much public attention. Our public life and agitation like our other efforts have a knack of pushing themselves to the fore by fits and starts, enjoying a long spell of sleep at intervals. By your timely article of Saturday last, you have helped to remind the public that the question is still to the fore and receiving attention from those who have given thought to it. A vigorous campaign would perhaps be considered out of the question just at present, but all the same, you are entitled to our thanks for keeping the subject "on the *tapis*" and not let it die a premature death.

C. V. SWAMINATHA AIYAR.

ANANDASHRAMA, TRIPLICANE, *Feb* 11.

---

# STUDIES IN INDUSTRIAL DEVELOPMENT.

## 1. THE FIRST PRINCIPLE.

"CHARACTER LIFTETH UP MAN" AND "ENDEAVOUR HELPS HIM FORWARD."

---

"And I, if I be lifted from the earth, will draw all *men* unto me."— *Jesus Christ.*

"Like the enchanted Princess of old, 'Industrial India' is still in the region of possibilities. The time of her awakening is nigh and in right time the destined Prince will come, at whose magic touch she will fully wake up. As it is, her age-long slumbers have been but rudely disturbed. There are 'signs' of coming awakening and the limbs move about; but the motions of the limbs show a certain aim lessness—a random starting and stretching which evidence as tate of dreamy consciousness that has yet to attain to full power of waking consciousness. "Arise, Awake!" her sons in millions shout, but they have yet to the realise that the secret of her strength lies in the uprightness of their individual life and conduct, or "character" in one word. "The individual dealing with individual is nesessarily at the bottom of all social progress. There can't be anything worthy the name without it. The truth will at once be recognised by all *that the good of the whole depends on the good of the each, and the good of each makes the good of the whole.*" We have all of us to learn to look inward for a moment and see if everything is all right *within.* We must learn to set our houses in order, learn to build up our "*character*" before we can set about building up a national industry and a national prosperity resting on national industries. Look at your past history and its glory if you have eyes to look! Look again on your present degradation and its results! Blink not! Blame not! It is not yet too late to mend! There is nothing impossible for "CHARACTER" to achieve. O BLESSD WORD! How much does that one word mean and how much can it do for us, if we only know how to make it and use it well."— *C. V. Swaminathaiyar in the "Hindu"*

The Sleeper says to him that awakens her :—

"Ah! beautiful one—ah! prince of love, so many times with thy fingers touching in vain my closed lids!

"Now at last thy love pouring in upon me has found an entrance, and filling my body breaks the bounds of it and bursts forth back again into the regions whence thou comest.——*Edward Carpenter*—"After Long Ages."

## பலதொழில் அபிவிருத்தி வித்தை.

### 1. "முயற்சி திருவினை யாக்கும்."

சென்ற ஐந்து வருஷகாலமாகி ஆத்ம வித்தையை யனுசரித்து குருமுகமாகக் கற்றதோர் கல்வியை உற்று நோக்கி உள்முகத்தில் சிந்தித்து அனுஷ்டானத்திற் கொண்டுவந்து அனுபவத்திலுணர்ந்து அந்தக் காரியத்திலுபயோகிக்கும் வழியின்னதென்பதை யுணர்ந்துகொள்வதில் ஊக்கமெடுத்துழைத்தோம். இவ்வுழைப்பு வீண்போகவில்லை. "முயற்சி திருவினையாக்கும்" என்கிற மூதுரை தவறாமல் ஆத்மவழிபற்றி யுழைத்ததில் ஆத்மதத்துவங்களுக்கெல்லாம் தலைவியாய் தத்துவாதீதமாய் (துவைதாத்துவைதமாம்) சகுணமாயும் (நித்தியகுண கல்யாணியாயும்) நிர்குணமாயும் (த்ரிகுணாதீத தன்மயஸ்வரூபமாயும்) விளங்கும் திருவாம் ஸ்ரீதேவியை தரிசன பூர்வகமாயும் அனுபவ பூர்வகமாயும் ஆத்ம பூரணமாய் உள்ளபடி யறியலானோம். அதைப்பற்றி வளர்த்தியெழுத இது சமயமன்று. சென்ற மூன்றுவருஷங்களாக வெளியான விவேகசிந்தாமணியில் வேண்டிய அளவு விரித்துக்கூறியுள்ளோம். உண்மையாக வுள்ளபடி அத்துறையிலிறங்கி யுழைப்போர்க்குச் சிறிது சாதகமாகும்படிக்குப், "மதிவளர்வித்தை"யாம் "சத்குண சம்பத்து" சித்திக்கச் செய்யக் குழந்தைகளை இளவயது முதல் பழக்கிவரவேண்டியதினவசியத்தை வற்புறுத்தக்காரணமாகவும் இருக்கும்படிக்கு நாம் ஸ்வமுயற்சியால் சிந்தித்து அனுசரித்து அப்பியசித்த வித்தைகளை மூன்று தொகுதிகளாக வகுத்துக் "கடவுளை வழிபடுமின்!" என்னும் தலைப்பெயர் புனைந்து மூன்றுவித "வித்யாமஞ்சரி"யாகப் பிரசுரித்துள்ளோம். அவற்றில்,

(1) முதலாவது தொகுதி: "ஆத்மவித்தியாமஞ்சரி; இதில் ஆனந்தத்தாய்மொழியடக்கம்.
(2) இரண்டாவது தொகுதி: பிரகிருதிவித்தியாமஞ்சரி யென்று சொல்லத்தகும்.

ஆனால் அதைப் 'பிரகிருதி வித்தியாமஞ்சரி' யென்று சொல்லாமல் அப்பெயரின் பொருள் விளங்கப் "பிரகிருதியினுண்மையில் பரமனைக் காணலாம்" என்னும் தலைப்பெயர் கூட்டி கிண்டர்கார்டன்முறைப் போதகாசிரியர் ப்ரோபேல் என்பவர் அனுசரித்த வழிபற்றி பிரகிருதி தத்துவங்களையுணரும் மர்மத்தைச் சுருக்கமாகச் சொல்லிக்கொண்டு போனோம்.

(3) மூன்றாவது தொகுதி: "மதிவளர்வித்தை" அல்லது "ஸ்ரீவித்தை." இதில் பிரகிருதி தத்துவத்தையுணர்ந்து பிரகிருதி வழிப்பட்ட தத்துவஞானி பிரகிருதி வசத்தனாயின்றிப் பிரகிருதியே தானாகி மூலப்பிரகிருதியையுங் கடந்துள்ள தத்துவாதீதப் பொருளாம் பராசக்தியோடொன்றுபட்டுக் கலந்து அவித்தையை வென்று (மஹிஷாஸுரவதம் செய்து) ஆத்மனையாகித் தன் ஆத்மஸ்வரூபமாம் தேவியை (அறிவை) உபாஸித்து (கிரமப்படி வந்தன வழிபாடுகள் செய்தனுசரித்து) அந்த தேவியானவள் இரண்டற்று ஏகமாய்க்கலந்து நிற்கும் சுத்தசிவமாம் அத்துவிதப்பொருளோடு தானும் "தன்மயமாய்த் தன்மை முன்னிலையற்றுக்" கலந்து நிற்கும் ரகஸியத்தையும், அந்த அத்துவித நிலையில் "தேஹோஹம்" பாவம் நசித்துப் போக "ஸோஹம் பாவ" சிந்தனையே மிகுந்தவனாகி அதினின்றும் வெளிப்பட்டு உலகுய்ய உத்தமமான வுண்மைவழிபற்றி "உலகத்திலிருந்தும் உலகஞான வழிபற்றியொழுகாமல், உலகத்தவரைப்போலின்றி, ஆத்மஞானியாய், ஆத்மானந்தபூரணனாய், ஆத்ம சிந்தனையே மேலாகக்கொண்டு சகஜசமாதியெய்தும் வரையில் உஷாராயிருந்துழைத்துவரும் மார்க்கத்தையும் காட்டி யெழுதியுள்ளோம். "தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது" ஆகையால் அனுபவஞானமில்லாத ஆத்ம சாதகர்கள் ஸ்வானுபவச்செல்வர்களை யடைந்து அவர்கள் மனங்குளிர நடந்து அவர்களை வழிபட்டு வணங்கி "குருமுகமாக" "குரு ஸந்நிதானத்திலிருந்து" பழகவேண்டியது. அப்படிப்பட்ட குருவை அவரவர்கள் சிந்

தனைக்கும் சத்பாவ சாதனைக்கும் தக்கபடி அவரவர்கள் தாமே ஈசுவரானுக்ரகத்தால் பெறுவார்கள். ஆனால் ஒன்று ஞாபகத்திலிருக்கவேண்டியது: "தெய்வம் காட்டுமேயன்றி ஊட்டாது!" காட்டினதொன்றைக் கைப்பிடியாகப் பிடித்து "நன்மைகடைப்பிடி" என்னும் மூதுரையை யனுசரித்துப் பிழைக்கமாட்டாதவர்களுக்குத் தெய்வம் யாதொரு சகாயமும் செய்யாது. அவர்கள் தாமாகப்பட்டனுபவித்துக் கெட்டலைந்து திண்டாடி யலுத்தபின்னே நல்வழிபற்றி நடப்பார்கள். இப்படியாக "சத்குணசம்பத்து" இகபரமிரண்டிற்கும் இன்றியமையாததோர் மூலசாதனமாகவும், முதற்கருவியாகவும், காரணங்களுக்கெல்லாம் காரணமாம் மூலகாரணமாகவுமிருக்கின்றமையால் அதையே மூலாதாரமாகக் கொண்டுழைக்க வேண்டும். 'சத்குணசம்பத்து' ("CHARACTER") இன்றி ஒரு காரியமுமாகாது. சத்குண சம்பத்திருந்தால் முடியாத காரியமொன்றுமில்லை. ஆகையால் "பலதொழிலபிவிருத்திவித்தை"யாம் தனவிருத்தி மார்க்கத்தை யாராய்ந்துதேர்ந்தெழுகப் புகுந்த நாம் தனவிருத்தி முயற்சிக்கும் "சத்குணசம்பத்து" இன்றியமையாததோர் மூலாதாரப் பொருளாமென்பதை இதற்கு மூலதத்துவமாகக்(The First Principle) கொண்டு, அதை மூலாதாரமாகவமைத்து மேல் விசாரம் செய்ய முயலுவோம். இது ஆங்கிலேயரது "தனவிருத்தி" சாஸ்திரக் கொள்கைக்கும் நம் ஆரியர்களது "அர்த்தசாஸ்திரக்" கொள்கைக்கும் பொதுவாய் காலதேச வித்தியாசமாறுபாடுகளுக்கு மிஞ்சி (அதாவது அம்மாறுபாடுகளினால் மாறுபடாததொன்றாய்) காலதேச வஸ்து பரிச்சேதரூபமாய் விளங்கும் இப்பிரபஞ்சவிருத்திக்கு மூலகாரணமாயுள்ள முதல்தத்துவமாக விளங்குவதாம்.

இதை நம்மவர்களில் மேலோராயுள்ளோர் உபதேச முறையாலும் அனுஷ்டான முறையாலும் விளங்கக் காட்டிப் போதித்திருக்கிறார்கள். ஔவையார் இந்த வுண்மையை மூன்று வார்த்தைகளில் என்றமழியாவொரு மூதுரையாகச் சொல்லி விளக்கியிருக்கிறார். அது என்னவெனில்:—"முயற்சி திருவினை ஆக்கும்." திருவள்ளுவநாயனார் இவ்வுண்மையை யனுஷ்டித்துக் காட்டிய மஹான். அவருக்கு தனதான்ய பாக்கியங்களெல்லாம் நிறையப் பெற்ற ஏலேலோசிங்கன் என்னும் வணிகன் சற்சிஷனாகவமைந்தும் அவர் அவனுடைய பொருளைச்சிறிதுமுபயோகிக்காது அவனிடத்தில் நூல் வாங்கி நெசவுதொழில் செய்து ஜீவனம் செய்தார். பூரணஞான சித்திபெற்றவர்களும் இல்லறத்திலிருந்தொழுகுதல் ஆகும் என்று காட்டுவான் அவர் இல்லறம் நடத்தினார். தெய்வவாக்குப் பொருந்த அவர் செய்த திருக்குறளில்,

"தெய்வத்தானாகாதெனினுமுயற்சிதன்
மெய்வருத்தக்கூலிதரும்."

என்று, முயற்சி வீண்போகாதென்பதை அனுபவ பூர்வகமாக அனுஷ்டித்துக் காட்டியதற்கிணங்கவெடுத்துச் சொல்லியிருக்கிறார்.

தெய்வ சகாயமே யில்லாவிட்டாலுங்கூட "முயற்சி தன் மெய்வருத்தக்கூலிதரும்' என்பதுண்மையானால் முயற்சியின்றி யிருக்கக் காரணமேயில்லை. வயிற்றுப் பிழைப்புக்கானாலும் சரி, வாய்ப்பிழைப்பிற்கானாலும் சரி, எழுத்துக்கூலிப் பிழைப்புக்கானாலும் சரி, ஜீவன்முக்தியாம் உயிர்ப்பிழைப்பிற்கானாலும் சரி, முயற்சி வேண்டும். முயற்சியின்றி யொருகாரியமும் ஆகாது. ஔவையாரும் இந்த உண்மையை உள்ளபடி வற்புறுத்துவான் "ஊக்கமது கைவிடேல்' என்று கூறியிருக்கிறார். ஊக்கத்தைக் கைவிட்டவர்கள் எல்லாவற்றையுங் கைவிட்டு "இருக்கவிடமும் உண்ணச்சோறும்" வேண்டாமென்று கைவிட்டவர்களாகிறார்கள். உண்மையிலுழைக்கும் சாதுக்கள், ஸந்நியாசிகள், ஊக்கமற்றுழைப்பற்றுத் திரிபவர்களென்று நினைப்பது சரியல்ல. வயிற்றுப் பிழைப்புக்காக வேஷம்போட்டுத் திரிகிறவர்களைப்பற்றி நாம் ஏதும் சொல்லவரவில்லை. இப்பொய்யுலகில் பொய்வேஷம் போட்டுப் பிழைப்பவர்கள் என்றுமிருப்பார்கள். அவர்களைப்பற்றி ஏதும் பரிந்துபேச நிமித்தமில்லை. "தன்வினை தன்னைச்சுடும்" என்பதாக அவர்கள்வினைதானே யவர்களுக்கு தக்க கூலி கொடுக்கும். உண்மைக்குழைக்கும் மெய்யடியார்கள் தேகபாவனையில் உழைக்காவிட்டாலும் அவர்

கள் தேசபாவனையைவிட்டுழைக்கும் மஹாதீரர்கள். அந்த உழைப்பு உழைக்க சாமான்யஜனங்களாலாகாது. அவர்களுடைய முயற்சியினால்தான் தர்மம் தலைகவிழ்ந்து போகாமல் ஏதோ கொஞ்சத்துக்குள் கொஞ்சம் சரியாக நடக்கிறது. "தர்மம் தலைகவிழ்ந்து போகும்போதெல்லாம் நான் அவதாரமாகி தர்மத்தை நிலைநிறுத்துகிறேன்" என்று ஸ்ரீகிருஷ்ணபகவான் அருச்சுனனுக்குச் சொன்னது பொய்யல்லவே.

நம்மவர்கள் உண்மையை உள்ளபடி யுணர்ந்துய்யாமல் வாசாவேதாந்தம் பேசிக் கெட்டுப்போனால் அதற்கு யார்தான் என்ன செய்யக்கூடும். அவர்களைப்பற்றியும் நாம் பேசுவதில் பிரயோஜனமில்லை. "சத்குணசம்பத்து"ப்பெற்றவர்கள் தேசநன்மைக்குழைக்கக் கடமைபட்டவர்களாயிருப்பார்களாதலால், இவர்கள் இக்காலத்திற் கின்றியமையாத "பலதொழிலபிவிருத்தி"வகையாம் "ஸ்வதேசீயம்" என்று சொல்லும் தனவிருத்தி வழியினுழைக்க முன் வருங்கால் எப்படி உழைப்பார்கள், இவ்வழியில் காரியம் கைகூடிவர எப்படி உழைக்கவேண்டும், என்னும் இவைபோலும் இது சம்பந்தமான அம்சங்களை ஆரத்தீர யோசித்து ஆத்மஞான பூர்வமாகவே தோன்றும் எண்ணங்களைச்சேர்த்து அனுபவத்திலும் அதைப் பரிசோதித்துப்பார்த்துக் கடைசியில் தேர்ந்துவரும் சிந்தனைகளை "பலதொழிலபிவிருத்திவித்தை" யென்னும் தலைப்பின்கீழ் தொடுபிடியாய்த் தொட்டு மாதந்தோறும் எழுதிவரலாமென்கிற உத்தேசங்கொண்டு இரண்டு வாரமாகச், சென்னையில் கவர்ன்மெண்டார் "பலதொழிலபிவிருத்தி சம்பந்தமாகச் செய்யும் முயற்சிகளுக்குத்தலைவரான (Superintendent of Industrial Development) மிஸ்டர் சாட்டர்டன் துரையவர்களுடைய பூரணசகாயம்பெற்று அவர் செய்துவரும் முயற்சிகளை, ஒவ்வொரு தொழிலிலும் உட்புகுந்து பார்த்து வேண்டிய அளவுக்கு அவ்வத்தொழில்களைச் சிறிது பயின்றும் பழகியுமுணர்ந்துகிரகித்து மேல் தோன்றும் எண்ணங்களை இத்தலைப்பின்கீழ் எழுதிவரக்கருதி எல்லாத்தொழில்விருத்திக்கும், தனவிருத்திக்கும் இன்றியமையாத "சத்குணசம்பத்து" நம்மவர்களிடத்திலிருக்கவேண்டியதின் முக்கியத்தை வற்புறுத்தி இந்த முதல் வியாசம் எழுதலானோம். இதைத் தொடர்ந்து படித்தாலன்றி இடையில்வரும் அருமையான கொள்கைகளும், சாதனசாதகவுபாயங்களும், தொழில் விவரங்களும் தந்திரங்களும் விளங்காவாகையால் இதில் சிரத்தையுள்ளவர்கள் இத்தலைப்பெயரின் கீழ் நாமெழுதிவருவதை ஆரத்தீர அமர்ந்து யோசித்துப் படித்து வருவார்களானால் அவர்களுக்கும், நமக்கும், பொதுவாக தேசக்ஷேமத்துக்கும் எவ்வளவோ சுகிர்தமுண்டு. நுனிப்புல் மேய்ந்து வாயில் வந்ததைப்பிதற்றி வல்லடிவழக்கு விளைப்பதால் காலஹரணமும் காரியச்சேதமுமன்றி வேறுபயன் யாதுமில்லை. ஆகையால் நம்மவர்கள் ஏனோதானோ வென்றிருப்பதைவிட்டு எதிலும் உண்மையை உள்ளபடியறிந்துய்யவேண்டுமென்கிற உத்தம சிந்தை மேற்கொண்டு, உண்மையிலிருந்து உள்ளபடி யுழைத்துவர மனதிற் சங்கற்பஞ் செய்துகொண்டு அம்மனோசங்கற்பந் தவறாது பார்த்துவரல்வேண்டும். "பதறாத காரியம் சிதறாது!" ஆகையால் எதிலும் நிதானம் வேண்டும். நிதானத்தோடு உண்மையில் நம்பிக்கையும் வேண்டும். இவ்விரண்டுமிருந்துவிட்டால் "முயற்சி திருவினை யாக்கும்" என்பது உண்மையில் சித்திக்கும். இதற்கு மூலமந்திரமென்னவென்றால் "ஊக்கமதுகைவிடேல்:" "தூக்கிவினைசெய்." தூக்கிப்பாராத காரியம் செய்யத்தகாது. நிதானமும் நிச்சய புத்தியுமிருந்தாலன்றி எதையும் தூக்கிப்பார்த்தல் சாத்தியமன்று. தியானமிருந்தாலன்றி "தூக்கிவினை செய்" என்பதை யனுஷ்டிப்பது கூடாமையாகும். ஆகையால் தியானவழிபற்றி நின்று நிஷ்காமிய கர்மமாய் தேசக்ஷேமத்தைநாடி தனவிருத்திக்குழைப்பவர்கள் யாரோ அவரே ஸ்வதேசீய சிரேஷ்டர்களாவார்கள். மற்றவர்களெல்லாம் அவர்களைப் பின்பற்றி நடந்து பெருமைபெற வல்லவராவர்.

EXTRACT.

# "VANDEMATARAM" (of Bankim Chandra Chaterjee.)

# வந்தேமாதரம்—தாயே வந்தனம்.

*(From the Chakravarthini.)*

HAIL MOTHER. — வந்தேமாதரம்.

**I**

Sweet Thy water, Sweet Thy fruits.
Cool blows the scented south wind.
Green waves thy corn.
Hail Mother! (Vande Mataram)

இனிய நீர்ப்பெருக்கினை, இன்கனி வளத்தினை,
தனிநறு மலயத் தண்காற் சிறப்பினை,
பைந்நிறப் பழனம் பரவிய வடிவினை!
போற்றிதாய்! (வந்தே மாதரம்)

**II**

Land of the glad white, moon-lit nights.
Land of trees with flowers in bloom.
Land of Smiles, land of voices sweet,
Giver of joy, giver of desire.
Vande Mataram!

வெண்ணிலாக்கதிர் மகிழ்விரித்திடு மிரவினை!
மலர்மணிப் பூத்திகழ் மரன்பல செறிந்தனை!
குருநகையின் சொல்லார் † குலவிய மாண்பினை!
நல்குவை யின்பம், வரம்பல நல்குவை!
வந்தே மாதரம்!

**III**

Seventy million* voices resounding,
Twice seventy million arms in resolve uplifting,
Dare any call Thee weak?
Obeisance to Thee! O Thou, mighty with multiple might,
Redeemer Thou, Repeller of the Enemy's hosts.
Vande Mataram!

முப்பது கோடிவாய்* (நின்னிசை)முழங்கவும்
அறுபது கோடி தோளுயர்ந் துனக்காற்றவும்
"திறனிலாள்" என்றுனை யாவனே செப்புவன்!
அருந்திறலுடையாய், அருளினை, † போற்றி!
பொருந்தலர் படைபுறத் தொழித்திடும் பொற்பினை,
வந்தே மாதரம்!

**IV**

In Thee all Knowledge, Religion Thou,
Thou, the Heart, Thou, the seat of life,
The "breath of life in the flesh"
Vande Mataram!

நீயே வித்தை, நீயே தருமம், †
நீயே யிதயம், நீயே மருமம், †
உடலகத்திருக்கு முயிருமன்னீயே.
வந்தே மாதரம்!

**V**

O Mother, the strength of this arm, Thou,
Thou, the Devotion in the heart,
Thine, the Image consecrate,
From temple to temp'e.
Vande Mataram!

தடந்தோ ளகலாச்சத்தி நீ! யம்மே,
சித்தநீங்காதுறு பத்தியு நீயே
ஆலயந்தோறு மணிபெற விளங்கும்
தெய்விக வடிவமுந் தேவியிங் குனதே!
வந்தே மாதரம்!

**VI**

The wielder of ten arms, Durga, Thou,
Thou, the Goddess of wealth, bowered in the lotus,
Thou, the Muse dispensing Wisdom.
Obeisance to Thee!
Vande Mataram!

ஒரு பது படைகொளு முமைய வணீயே.
கமல மெல்லிதழ்களிற் களித்திடுங் கமலை நீ!
வித்தை நன்கருளும் வெண்மலர்த் தேவி நீ!
வந்தே மாதரம்!

**VII**

Salutations to Thee! Holder of Wealth, peerless
With thy limpid water and luscious fruit,
Mother! Hail, Mother!
Verdant, Artless, Sweet—Smiling,
Radiant, Sustaining, Nourishing,
Mother! Hail, Mother!
Vande Mataram!

போற்றி! வான் செல்வீ, புரையிலை † நிகரிலை.
இனிய நீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை.
சாமள நிறத்தினை † சரளமாந் † தகையினை,
இனியபுன் முறுவலாய்! இலங்குநல் லணியினை,
தரித்தெமைக் † காப்பாய்! தாயே, போற்றி!
வந்தே மாதரம்!

---

* When Bankim wrote this song the population of Bengal was only 70 millions. In the Tamil rendering, this has been changed into "300 millions" so that the song might apply to our *Bharatmata* (Mother-India) instead of merely a single Province.

* பெங்காளி பாஷையிலே 7-கோடி என்றே கூறியிருக்கின்றது. ஆனால் அது பெங்காள மாகாணத்தை மட்டிலுமே குறிப்பிட்டது. 30-கோடி இந்தியா முழுமையின் ஜனத்தொகை.

† இக்குறிப்பிட்ட இடங்களில் ஆங்கிலமொழிபெயர்ப்பானது சிறிது மாறுபட்ட தோற்றங் கொண்டிருப்பதால் பெங்காளிச் சொற்களைத் தழுவியே தமிழ் எழுதப்பட்டிருக்கின்றது.

# "HANGED BY CONVICTION."

*(From the French of Eugene Chavette.)*

# "கோபுரத்தின் மேலேறிய குரங்கு"

அல்லது,

## "மனதாற மரணதண்டனைக் குடன்பட்டவன்."



(306-வது பக்கத் தொடர்ச்சி.)

ராஜா:" அடே, நானும் பறையன்தானடா! ஸந்தியாவந்தனம் அடியோடுவிட்டு ஆறுமாதமாகிறது. அதற்கு முன்னமேயே ஏதாவது வேலையில்லாவிட்டால் தெரிந்த வரையில் ஸந்தியாவந்தனம் செய்வதுண்டு! அதற்கு அர்த்தம் மட்டும் என்னவென்று யாரும் கேட்காதேயுங்கள்!—கண்டவர்கள் வீட்டுச் சோறெல்லாம் இந்த வயிற்றில் சென்றிருக்கிறது. பள்ளி பறையன் செய்த ரொட்டியெல்லாம் தின்றாய்விட்டது. இனி எனக்கு பிராமணத்துவம் எங்கிருந்து வந்தது! நீ யோக்கியமான பறையன், நான் திருட்டுப் பறையன், இதுதான் வித்தியாசம்" என்றார்.

உடனே தீக்ஷதர்: "மகாராஜா, உண்மையான பறையனும் திருடனும் நான்தான். பிறருடைய பணத்தை வெளிவேஷம் போட்டு யாசித்து தேவ கந்தர்வ ஸ்திரீகளைச் சிறையிலடைத்ததுபோல் உபயோகிக்காமல் புதைத்து வைத்தேன். அவாவர்கள் கையிலிருந்தாலும் ஏதாவது நல்வழியிலுபயோகிப்பார்கள். அவர் ஸந்தியாவந்தனம் விட்டுவிட்டதாக ஒப்புக்கொள்கிறார். நான் ஸந்தியாவந்தனம் செய்வதாகப் பாசாங்கு செய்துகொண்டு 'இன்றைக்கு எவ்வளவு ரூபாய் சேர்ந்தது! இன்றைக்கு கும்பல் எங்கே அதிகம்! எந்த இடத்தில்போய் உட்கார்ந்து யாசித்தால் அதிகபணம் கிடைக்கு'மென்று யோசித்துக்கொண்டே போர்வையில் கையிட்டு மூக்கைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து வந்தேன். நானே உண்மையான கொலையாளி! நிரபராதியான இந்த மஹானைக் கொலைக்குக் கொண்டுவந்து விட்டவன்! ஆதலால் என்னைத் தூக்குப்போடுங்கள்.'—என்று முறையிட்டார்.

இதற்குள் ஒருபறைச்சி ஓடிவந்து நியாயாதிபதி காலில் விழுந்து "ஆண்டவனே—இவர்தான் என் குழந்தைகளைக் காப்பாற்றின தர்மதுரை. என்புருஷன் அவரைத் தூக்குபோட வேண்டுமானால் முதலில் என்னைத்தூக்குப்போட்டு விட்டுப்பிறகு என்ன வேண்டுமோ செய்யுங்கள்" என்று புலம்பினாள். இவள்தான் பழைய புல்லுக்கட்டுக்காரி. கொலையாளியின் பெண்சாதி—அவள் சாயந்திரம் அஸ்தமித்துவிட்டபடியால், கடைத்தெருவிலிருந்து குழந்தைகளைக் குடிசையிற் கொண்டுபோய் விட்டுத் தூங்கச் செய்துவிட்டு பிறகு தன் புருஷனிடத்தில் மோகருவைக்காட்டி சந்தோஷ சமாசாரம் சொல்ல வந்தவள். அங்குநின்ற கும்பலைக்கண்டு சங்கதியென்னவென்று விசாரித்து "ஓகோ குடி கெட்டுப்போய் விட்டதே!" என்று நியாயாதிபதி காலில் விழுந்தாள். நியாயாதிபதிக்கு இதையெல்லாம் பார்த்ததும் ஒன்றுந் தோன்றவில்லை. "இதென்ன கனவோ? நினைவோ?" என்றார். அந்தப் பறைச்சியின் முகத்தை உற்றுப்பார்த்தார். சற்றுமுன் தான் கனவில் கண்ட ஸ்திரீயின் முகம்போலிருந்தது. இதில் ஏதோ விசேஷமிருக்கிறதென்று தூக்குப்போடுவதை தற்காலத்துக்கு நிறுத்தி விடும்படி உத்தரவு கொடுத்துவிட்டு ராஜாவைப்பார்த்து சொன்னார்: "சுவாமி நான் என்னுடைய கடமையைச் செலுத்துவதில் தங்களுக்கு ஏதாவது அபசாரம் நேர்ந்தாலும் க்ஷமிக்கவேண்டும். தங்களை இன்று கச்சேரியில் பார்த்த உடனே தாங்கள் அருள்பெற்ற அடியார்களிலொருவர் போல் தோற்றிற்று. இருந்தாலும் எல்லாருக்கும் ஒரு சட்டந்தானே என்று ஏதோ என்னுடைய அற்பபுத்திக் கெட்டினவரையில் தீர்ப்புச் செய்தேன். அந்தத்தீர்ப்பு பிசகு என்று கடவுளே எனக்கு எச்சரிக்கை கொடுத்திருக்கிறார். இனி மேலதிகாரிகளுக்கு எழுதி அந்தத்தீர்ப்பை மாற்றிவிடுகிறேன். என்னை மன்னிக்கவேண்டும்" என்று நமஸ்கரித்தார்.

உடனே பறைச்சியைப்பார்த்து "இந்நேரத்தில் நீ இங்குவந்த காரணமென்ன"வென்று கேட்டார். அவள் சாயந்திரம் தான் ராஜாவைப் பார்த்தது முதல் அந்தக்ஷணம் வரையில் நடந்ததை அப்படியே சொல்ல, அதைக்கேட்டிருந்த தீக்ஷதர் "ஓகோ! இப்பொழுதல்லவோ ஏற்பட்டது. செலவழிக்கத் தெரியாதவன் கையில் பணமிருந்து என்ன பிரயோஜனம். பணத்தினருமை தெரியாத பாவியானேனே! பிறவிக் குருடனானேனே!" என்று அப்படியே ராஜாவைக் கட்டிக்கொண்டு விம்மி அழுதார். பறையனும் "இந்த புண்ணிய புருஷனல்லவோ எனக்கு தாய்தகப்பன் எல்லா உறவுமானார்" என்றழுதான்.

நியாயாதிபதி தீக்ஷதரைப்பார்த்து "நீர் இங்கெப்படி வந்தீர்? இப்பொழுது அழுகிற காரணமென்ன?" என்று வினவ—அவர்: "மகாராஜா தயவுசெய்து கோவிலுக்கு வாருங்கள், சமாசாரம் இன்னதென்று காண்பிக்கிறேன்" என்றார். எல்லாரும் அப்படியே ஊர்கோலம் போவதுபோல் கோவிலுக்குப் போனார்

கள். அப்பொழுது அர்த்த ஜாமமாகி கோவில் கதவு சாத்துகிற சமயம். அம்மன் கோவிலில்மட்டும் தம் பாலத்தைக் கீழேபோட்ட தீக்ஷதர் எங்கே ஓடிப்போனார்" என்று எல்லாரும் கும்பலாய் ஆச்சரியமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவருக்கு எதாவது திடீரென்று பைத்தியம்பிடித்துக் குளத்தில் விழுந்துவிட்டாரோ என்றுகூட நினைத்தார்கள். நியாயாதிபதியும் பரிவாரங்களுமாக தீக்ஷதர் கோவிலுக்குள் நுழையவே எல்லாரும் வழிவிட்டு விலகிநின்றார்கள். நியாயாதிபதி அம்மன் மார்பில் இருந்த மோகருவையும் பறைச்சிசொன்ன விருத்தாந்தத்தையும் சேர்த்துப்பார்க்கவே அவருக்கும் கண்களில் நீர் ததும்பிற்று. ராஜாவும் அந்த மோகருவையும் அதன் முத்திரையையும் பார்த்தவுடனே "தாயே ஏழையை இப்படிப்பரிசோதிக்கலாமா? நான் ஏதோ விளையாட்டுக்காகச் சொன்ன சொல்லை வினையாகச் செய்த என்னன்னையே, உனன்புக்கு நான் என்ன ஈடுசெய்யப்போகிறேன்" என்று அப்படியே மூர்ச்சித்தார்.

அவர் தெளிந்தெழுந்ததும் எல்லாருமாகக் கடவுளைநமஸ்கரித்து அவரவர் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். அன்றிரவு முழுவதும் ஊரெல்லாம் இந்த ஆச்சரியமே பேச்சாயிருந்தது. ராஜாவும் மெதுவாய் கும்பலிலிருந்து நழுவி பழைய கோபுரத்திலேறி இத்தனைநாளாய் இராக்கண் விழித்த சிரமந்தீர,

"கெட்டியென்றுன்னன்பர் மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாந்
தொட்டிலுக்குட் சேய்போற்றுயின்றார் பராபரமே" என்று

சமாதியிற்றுயின்றார். அப்பொழுது பூரண சந்திரன் "அப்பா, இதுதான் ஆநந்தம்! இப்பொழுது எங்கள் ரஹஸியத்தைக் கண்டுபிடித்துவிட்டாயல்லவோ!" என்று மெதுவாய் புன்சிரிப்போடு அவர் காதில் சொன்னான். பழைய காற்றாடியும் "நின்னு பாவி" என்னும் கீர்த்தனையை ஆதியோடந்தமாய் பல்லவி சங்கதிகளுடன்பாட, அந்த ஆனந்தத்தில் மூழ்கினராஜா இரவுமுழுவதும் தூங்காமற்றூங்கிச் சுகித்திருந்தார்.

நியாயாதிபதி கோவிலுக்கு வெளியே வந்ததும் அங்கே காத்திருந்த பறையனைப்பார்த்து "அடே, நீ மட்டும் எப்படியடா இவர் மகிமையை எல்லாருக்கும் முன்னதாகக் கண்டுபிடித்து தூக்குப்போடமாட்டேனென்று மறுத்தாய்" என்றுகேட்க, பறையன்: "மகாராஜா எனக்கு ஆறுமாதமாய் இவர் நினைவே நினைவாய் பைத்தியம் பிடித்து இவரைக்காணாவிட்டால் உயிரைமாய்த்துக் கொள்ளுகிறதென்று தீர்மானித்திருந்தேன். ஏதோ ஆண்டவன் அவரை இன்றுகொண்டுவந்துவிட்டார். இனிநான் கடைத்தேறிவிட்டேன். என்னைமட்டும் தாங்கள் தயவுசெய்து இந்தத்தொழிலிலிருந்து நீக்கவேண்டும். அதுதான் ஏழையின் கோரிக்கை" என்றான். அதற்கு நியாயாதிபதி "அப்பா நீ வெகு புண்ணியசாலி; உனக்குக் கடவுள் சீக்கிரத்தில் நல்லகதி கொடுப்பார். நான் அந்த வேலையில் இருக்கிறது நிச்சயமில்லை. ஆதலால், உன் கோரிக்கையை என்னிடத்தில் சொல்வதிற் பிரயோஜனமில்லை' என்றார்.

மறுநாள் நியாயாதிபதி கோவில் அதிகாரிகளிடத்தில் உத்தரவு கேட்டு அந்த ஆச்சரியமான மோகருவைக் கையிலெடுத்துக் கொண்டு நேரிலேயே நவாபு ஸமஸ்தானம் போய் அங்கே சட்ட நிரூபண சபையாரிடம் மோகருவைக் காட்டி நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லி, ராஜாவை மன்னித்துத் தன் தீர்ப்பை மாற்ற உத்தரவு கொடுக்க வேண்டுமென்றும், திருட்டுக் குற்றத்திற்காகக் கொலை வாங்குவது மிக அநியாயமான கொடிய தண்டனை என்றும் அதை மாற்றாவிட்டால் தான் வேலையை ராஜிநாமா கொடுத்துவிடுவதாகவும் சொல்லி வாதாடி தேசத்து சட்டத்தை சீர்திருத்தி ராஜாவுக்கும் மன்னிப்புப் பெற்று வந்தார். நவாபுக்கும் அவர் சபையாருக்கும் இந்த நியாயாதிபதியினிடத்தில் "இவர் பரமயோக்கியர்: சட்டத்தை பக்ஷபாதமில்லாமல் நெறிதவறாமல் நடத்துபவர்" என்கிற மரியாதையிருந்தபடியால் இவர் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இவர் ஏற்பாட்டை அங்கீகரித்தார்கள். அப்படியே கொலையாளித் தொழில் பரம்பரையாய் வரவேண்டுமென்கிற சட்டமும் ரத்து செய்யப்பட்டது. மறுநாள் முதல் நல்ல மழை பெய்து தேசத்திற்கு சுபிக்ஷகாலம் பிறந்தது. ராஜாவின் ஞாபகார்த்தமாகப் பாழ்கோபுரமும் முடிவுபெறக் கட்டப்பட்டது.

ராஜாவும் அந்த கோபுரத்தடியிலேயே ஏழைக் குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுத்துக் கொண்டு வெகுநாள் ஜீவித்திருந்தார். இவர் தமிழ், ஸம்ஸ்கிருதம், ஸங்கீதம் எல்லாந்தெரிந்தவராயிருந்தமையாலும், அபூர்வ பக்திமானாயிருந்தமையாலும் இவரை யறிந்தவர்களெல்லாம் இவரிடத்திலேயே தங்கள் பிள்ளைகளைப் படிக்க அனுப்பினார்கள். இவருக்கு வேண்டியதெல்லாம் கேவலம் அன்னவஸ்திரமேயொழிய வேறொன்றுமில்லையாதலால், அதற்குக் குறைவில்லாமல் கொடுத்து வந்தார்கள்.

பழையபாகவதர் இவரைக்கண்டு "சுவாமி, தாங்கள் என் பெண்ணை விவாகத்துக்கங்கீகரிக்கவேண்டும்" என்றதற்கவர் "அடியேனுக்கு வேறு இடத்தில் ஏற்கனவே விவாகம் ஆகிவிட்டபடியால் தங்கள் கோரிக்கையை நிறைவேற்ற சக்தியற்றவனாயிருக்கிறேன். மேலும் தங்கள் பெண்ணே எனக்கு முதல் குருவாதலால் அந்த அம்மாளுக்கென் நமஸ்காரங்களைச் சொல்லப் பிரார்த்திக்கிறேன்." என்றார். ஒரு வாரத்துக்கெல்லாம் 35 வயதுள்ள ஒரு தாசில்தாருக்கு முதல் ஸம்ஸாரம் தவறிப்போக பாகவதர் பெண்ணை இளையாளாகக் கொடுத்தார்கள். தூக்குப்போட்ட கயிற்றைப் பூஜை செய்யாமலே அந்தப்பெண்ணின் பிரார்த்தனை நிறைவேற்றிற்று.

நியாயாதிபதி ராஜாவைக் கண்டு "சுவாமி! தாங்கள் இப்படி கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கலாகாது. என்னுடைய பங்களாக்களில் ஒன்றை உங்கள் ஜாகைக்காக ஏற்பாடு செய்திருக்கிறேன். ஒரு சமையல்காரனும் இரண்டு வேலைக்காரனும் கொடுக்கிறேன். தாங்கள் அங்கே விஜயம் செய்து என்னை கௌரவப்படுத்த வேண்டும்" என்றார். அதற்கு ராஜா "ஐயா தங்களுக்குத் தெரியாத தொன்றுமில்லை. ஒருவன் பதிலுக்கு ஒருவேலையும் செய்யாமல் உலகத்திலிருக்கிற சோற்றைமட்டும் தின்றுகொண்டிருந்தால் அவன் திருடனல்லவா? மேலும் எல்லாருக்கும் வேலைக்காரனுயிருக்கிற எனக்கு வேலைக்காரர்கள் என்னத்துக்கு? ஆதலால் தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும்" என்றார்.

பழைய கொலையாளியாகிய பறையனும் வேளாண்மைத் தொழிலில் பிரவேசித்து சுகமாய் ஜீவித்து வந்தான். தினம் தவறாமல் ராஜாவை ஒருதரம் தரிசித்துவிட்டுத்தான் அவன் சாப்பிடுகிற வழக்கம். ஒழிந்தவேளைகளில் தான் ராஜாவினிடத்தில் எழுதப் படிக்கவும் கணக்கு வழக்குகள் போடவும் கற்றுக்கொண்டதை பறைப்பிள்ளைகளுக்கு சொல்லிக் கொடுத்து வந்தான்.

சிவதர்ம தீக்ஷதரும் தன்னுடைய உண்டிப்பணத்தைக் கொண்டு ஒரு தர்ம பாடசாலை ஏற்படுத்தினார். தானும் ராஜாவினுடைய முக்கிய சிஷ்யராகி "கோழைமனம் குடிகெடுக்காதெனைக் காத்தருளத் தயவுமிகவேண்டும் தாயே" என்று தியானத்திலேயே மூழ்கியிருந்தார். கதை இதோடு முடிந்துவிட்டாலும் ராஜாவினுடைய வேடிக்கைப் பேச்சுகளைமட்டும் கொஞ்சம் சொல்லி நிறுத்திவிடுவோம். அவர் சாகிற பரியந்தம் அவருடைய பரிஹாஸம் அவரை விடவில்லை. வெகு பேர்கள் அவரை "வெறும்விகடகவி, கல்விப் பேச்சுக்காரன்" என்று சொல்வார்களேயொழிய அவருடைய உண்மையான யோக்கியதையை அறிந்தவர்களில்லை.

யாராவது அவரை இல்லறம் பெரிதா துறவறம் பெரிதா என்றாவது, உலகத்தில் புருஷர்கள் யோக்கியர்களா ஸ்திரீகள் யோக்கியர்களா என்றாவது கேட்டால் அதற்கவர் "உள்ளவிஷயம் ஒன்றுதான். அதையறிந்துவிட்டால் எப்படியிருந்தாலும் பாதகமில்லை. * ஆசுக்கூடி ஆணானாலும் பெண்ணானாலும் ஹிருதயம்மட்டும் சரியானபடி சரியான இடத்தில் இருந்தால் மற்ற அவயவங்கள் எப்படியிருந்தாலும் எங்கிருந்தாலும் பாதகமில்லை" என்பார்.

யாராவது குடும்ப கஷ்ட நிஷ்டூரங்களைப்பற்றி வருத்தமுற்றால், தன் தலையைத் தடவிக்கொண்டு "மொட்டைத்தலை சுகமறிவீர்களா, மயிர்த்தலை மூடர்களே" என்பார்.

யாராவது இருவர் "எனக்கு நீ கொடுக்கவேண்டும், உனக்கு நான் கொடுக்க வேண்டுமென்று சண்டையிட்டுக் கொண்டிருந்தால். அவர்களை மெதுவாய்க் கூப்பிட்டு—"ஒரு பள்ளிக்கூடத்தில் சேவகன் ஒரு பானைநிறைய எழுதும் மை செய்தான். அதைக் கொஞ்சம் கெட்டிப்படுத்துவதற்காக அதில் ஒரு சிறு கற்கண்டுக் கட்டிபோட்டான். இதைக் கவனித்திருந்த இரு பிள்ளைகளில் ஒருவன் மற்றவனுடைய மைக்கூட்டை எடுத்து திருட்டுத்தனமாய் அதில் மை நிரப்பிக்கொண்டு போகையில் மற்றவன்—"இது என்னுடைய மைக்கூடு; ஆதலால் இதற்குள்ளிருக்கும் கற்கண்டு எனது" என்றான். முதல்வன் "இது நான் சம்பாதித்த மையாதலால் இதிலிருக்கும் கற்கண்டு என்து" என்றான். இருவருமாக சண்டை செய்கையில் மைக்கூடு தவறி விழுந்து மையெல்லாம் கொட்டிப் போய்விட்டது. "கீழ்விழுந்த மையை நான்தான் நாக்கினால் நக்குவேன்" என்று இருவரும் சண்டைசெய்து முடிவதற்குள் மையெல்லாம் தரையில் ஊறி உலர்ந்து போயிற்று. இன்றைக்கெல்லாமிருந்தாலும் அந்த ஒரு சிறு கட்டிலுள்ள மையில் எவ்வளவு கற்கண்டு கரைந்திருக்கப் போகிறது. இப்படிபோல்தானிருக்கிறது உங்கள் சண்டை" என்று கதை சொல்வார்.

விதவைகள் புனர்விவாகம் செய்துகொள்ளலாமா என்று யாராவது கேட்டால், அதற்கு "நம்மிருவரில் யாவரும் விதவையல்லவே? அதைப்பற்றி நமக்கேன் அவ்வளவு கவலை?—நம்முடைய கடமையெல்லாம் நமதாதீனத்திலிருப்பவர்களை அஞ்ஞானத்திலிருத்திவைக்கக் கூடாதென்பதே யொழிய, உண்மையை உள்ளபடி ஓதிவிட்டால் அப்புறம் அவரவர் பாடு-ஆகுமென்றும் ஆகாதென்றும் சொல்வதற்கு நாம் யார்?" என்பார்.

நாஸ்திகர்களைக் கண்டால் அவருக்கு வெகு விசுவாசம். யாராவதுநாஸ்திகன் "சுவாமி, இந்த வயிறும் உலகத்தில் இவ்வளவு போக்கிரிகளும் இல்லாவிட்டால் நீங்கள் சொல்கிறபடி கடவுள் இருக்கிறார் என்று ஒப்புக்கொள்வேன்" என்றால், அவர் "அப்பா, வயிறு வயிறு என்று அதன்பாடே பெரும்பாடாய்ப் போய்விட்டது வயிற்றையும் போக்கிரிகளையும் பற்றி இவ்வளவு இரைச்சல் போட்டுக் கொண்டு தம்பட்டமடிக்காவிட்டால் எல்லாம் சரியாய் நடந்தேறிவரும். ‡அப்படிக்கில்லாமல் "இன்றைய சாப்பாட்டுக்கென்ன செய்வோம், இவன் போக்கிரி, அவன் துஷ்டன்" என்று நாமே பலறையறைவதனால், இரைச்சல் போடாதே இரைசசல்

* "Provided the heart be in theright place it is no matter what sex a man belongs to."

† "The whole lot to be divided is such a beggarly matter, truly a 'feast of shells' of which the substance has been spilled out! and the whole human species clutching at it!"—*Carlyle.*

‡ "Quietly and cunningly Ignore Evil. Half theEvils in the world will vanish if people will earn to be quiet.—Pascal."

போடாதே, என்று நாமே இரைச்சல் போடுவது போல் அவர்களை இன்னும் அதிகமாக முன்னுக்குத் கொண்டுவந்துவிடுகிறோம்!—நமக்கும் வேறுவேலைக்கு சாவகாசமில்லாமல் போய்விடுகிறது. தேகத்தில் சொரி, சிரங்குகளிருந்தால் அவற்றை மூடிக்கொண்டல்லவோ போகவேண்டும்! "என்னுடைய சொரி சிரங்குகளைப் பாருங்கள்" என்று தெரு முழுவதும் கூவிக்கொண்டு போவார்களா? வேண்டுமானால் ஒரே ஒரு தகுந்த வைத்தியனிடத்தில் ரகசியமாய் காண்பிக்கலாம். அந்த வைத்தியனே கடவுள். அவரைக் குறித்துப் பிரார்த்திப்பதே தகுந்த வைத்தியம் என்பார்.

"ஆனால் துஷ்டர்களை தண்டிக்காமல் என்ன செய்கிறது?" என்று கேட்டால்—"தண்டிக்க வேண்டியதுதான். ஆனால் நான் தண்டிக்கிறேன் நீ தண்டிக்கிறேன் என்ற அகங்காரமடையாமல், பொது நன்மைக்காகப் பொதுவார் தண்டிப்பதாக பாவிக்கவேண்டும். பிறருடைய தண்டனையைப்பார்த்து "நாம் இப்படியெல்லா மிராமல் எவ்வளவு யோக்கியமாயிருக்கிறோம்" என்று கர்வங்கொள்ளாமல் "நம்முடன்பிறந்தவர்களை இப்படி தண்டிக்க வேண்டியிருக்கிறதே" என்று அவர்களுக்காக இரங்கி வருந்தவேண்டும். வழிதப்பிப்போய் முள்ளிலும் புதரிலும் படுகுழியிலும் விழுந்து கரையேற வழிதெரியாமற்றவிக்கும் துரியோதன துச்சாதனாதிகளைக் கண்டு சிரிக்காமல், முன் போகிறவன் காலில் முள் தைத்தால் பின் வருகிறவனுக்கு தீவட்டி வெளிச்சம் என்று அவர்களை நமக்கு நல்வழி காட்டிய தெய்வமாக பாவித்து உள்ளன்போடு அவர்களுக்கிரங்கிக் கூடியவரையில் கரையேற்ற ஒத்தாசை செய்வதுதான் நம்கடமை. மேலும் * உலகத்தில் ப்ரமயோக்கியன் யாரென்று உற்றுப்பார்த்தால், உடைந்து முழுகிப்போகும் மாக்கலத்திலிருந்து தற்செயலாய் தப்பித்து மிதந்துகொண்டிருக்கும் மரக்கட்டையைப் பிடித்துக்கொண்டு அலைகளுடைய தயவினால் கரைசேர்க்கப்பட்டவனா யிருப்பான். அவனையே கேட்டாலும், தான் ஐந்தாறுதரமாவது தூக்குப்போடத்தக்கவன் என்று ஒப்புக்கொள்வான். பூமாதேவி தன் துஷ்டப்பிள்ளைகளை என்ன செய்கிறாள் பார்! சந்தடிசெய்யாமல் அவர்களை சமயம் பார்த்து ஸ்மசானமென்னுந் தொட்டிலிற் தூங்கச்செய்து + 'அப்பா குழந்தாய்! நீ என்னை இல்லாத பாடெல்லாம் படுத்தி என் பெற்ற வயிற்றைப் புண்ணாக்கிவிட்டாய். இருந்தாலும் நீ குழந்தையாதலால் உன்னை மன்னித்து மறந்துவிடுகிறேன்" என்று அருகம் புற்கள் வழியாகவும்காட்டுமுல்லைப்பூ வழியாகவும் மெது வாய்ப் பரிமளமாகப் பெருமூச்சு விடுகிறாள் என்று அவரின்றி அவருடைய அருள்வாக்குப் பெருகும்.

‡ "எந்தவஸ்துவையும் கூடியவரையில் உயர்ந்த வேலைக்குபயோகப் படுத்தவேண்டும் பனிரீஸ்பட்டை வீடுமெழுகுஞ் சுருணையாக உபயோகிக்கலாமா? அப்படி எல்லாவற்றிலும் உயர்ந்த வேலை என்னவென்றால், எல்லாவஸ்துவையும் கையெடுத்துக் கும்பிடுவதே" என்பார்.

இவர் சாகும்பொழுது தன் பக்கத்திலிருந்த சில சிஷ்யர்கள் அழ ஆரம்பிக்கவே, அவர்களுக்கொரு கதை சொன்னார்: "ஒரு கர்ப்பஸ்திரீ தன் புருஷனைப் பார்த்து 'அடுத்தவீட்டுக் கொல்லையில் சுரைக்காய் காய்த்திருக்கிறது அதைச் சாப்பிட எனக்கு ஆசையாயிருக்கிறது, பறித்துக்கொண்டுவா" என்றாள். அவன் ஊரார்பொருள் நமக்கென்னத்துக்கு நாளைக்கு வாசலில் விற்கப்போகிற சுரைக்காயை வாங்கித்தருகிறேன், என்றான். அவள் 'எனக்கது வேண்டாம், அடுத்தவீட்டுக் கொல்லையில் கீழண்டை மூலையில் தொங்குகிற பிஞ்சுதான் வேண்டும்' என்று பிடிவாதம் பிடிக்கவே புருஷன் இருட்டுவேளையாதலால் விளக்கை யேற்றிக்கொண்டு, பாதிராத்திரியில்அடுத்தவீட்டுக்கொல்லையில் போய் காயைப் பறித்துக்கொண்டுதிரும்புகையில் அவ்வீட்டுக்காரன் தற்செயலாய் கொல்லையில் கட்டியிருந்த மாட்டிற்குப் புல்லுப்போட வந்தவன் விளக்குவெளிச்சத்தைக்கண்டு திருடனைக் கையும் களவுமாய்ப் பிடித்து அவன் காதையும் மூக்கையும் கத்தரித்துவிடவே, அவன் அப்படியே ரத்தம்வடிய பெண்டாட்டியினிடத்தில் சுரைக்காயை வீசியெறிந்து 'அடியே' சண்டாளி, சுரைக்காய் வேண்டுமென்று என்னை கெடுக்கவேண்டுமென்று கெடுத்தாயே, விளக்கு வெளிச்சத்தில் என் முகத்தைப் பார்த்து அழவேண்டுமானால் அழுதுகொள்! சிரிக்கவேண்டுமானால் சிரித்துக்கொள்!" என்றானாம். அதுபோல் உலகத்தில் பிறர் துக்கிப்பதைக் கண்டால் நமக்கும் துக்கம் வந்துவிடுகிறது! அவர்களுடைய துக்கத்திற்கு காரணத்தை விசாரித்தாலோ சிரிப்பு வந்துவிடுகிறது.

* கடவுளே உலகத்துமாந்தர்களின் திருவிளையாடல்களைக் கண்திறந்து ஒருதரம் எட்டிப்பார்த்தாரானால் கொல்லென்று சிரித்துவிடுவார் என்பதற்கு தடையேயில்லை என்று சொல்லிவிட்டு இறந்தார். அவரை ஸ்மசானத்துக்குக் கொண்டுபோய் அக்கினியைப் போடுகிறவரையில் அவர் முகத்தில் புன்சிரிப்பு மாறாதிருந்தது.

ஸ்ரீ. ராஜநாயகி.

* The best of us are but miserable sinner saved from shipwreck"—*George Eliot.* The best of us will admit that he has deserved hanging at least 5 or 6times.—*Montaigne.*

+ "You have scarred my bosom, but yet my mother's heart forgivesyou all." — *O. W. Holmes.*

‡ Put everything to the best use, *vig,* Worship.

* "God must needs laugh outright, could such a thing be, to witness His wondrous mannikin here below."
—D'Alembert.

## A PEEP BEHIND THE CURTAIN.

## திரையைத் தூக்கினால் தெரியுமுண்மை

இப்பொய்யான மெய்க்கதையை இவ்வளவு பொறுமையோடு கேட்டுவந்த நண்பர்களுக்கு நம் பெருவந்தனம். பார்க்கிறபடி பார்த்தால் பொய்யும் மெய்யாகிவிடும். எனெனில் பொய்களுக்கெல்லாம் மெய்யே ஆதாரம்—அதாவது பொய்களெல்லாம் *மெய்யைப்போல் வேஷம் பூண்டு மெய்யை ஆசிரயித்து அண்டிப் பிழைப்பதனால்தான்-கொஞ்சகாலமாவது ஜீவித்துவருகின்றன.

* அனுசரித்துப் பாவனைசெய்துவர ஒரு மெய்யில்லாவிட்டால் பொய்யென்கிற பெயரே தரிக்காது. இந்தக்கதையும் எந்த மெய்யை ஆசிரயித்து நிற்கிறதென்று பார்ப்போம்:

ராஜாவென்பது யாரெனில் தேகமாகிற தேவாலயத்தில் அற்ப புத்தியுள்ள மூளையாகிற பாழுங்கோபுரத்திலேறியமனக்குரங்கே—இம்மனதுஸ்வபாவத்தில்(ஜாதகரீதியாய்)ராஜாவாயிருக்க வேண்டியது—எல்லாவற்றிற்கும் மேற்பட்ட அதிகாரியாயிருக்கவேண்டியது. அரைநிமிஷகால வித்தியாசமாகிறஅற்பத் தவறினாலே, †அதாவது மாயையின் சலனமாகிய சங்கல்ப சக்தியினாலே, கிரமமாய் நடந்து போகிறவன் காலில் ஒருசிறு கல்லிடறினாற்போல், பிறப்பு, இறப்பு, சுகதுக்கம் முதலிய—துவந்துவங்களாகிய பலஆபத்துகள் விளைந்து, பிரபஞ்சநாடகமாடி, தனது உண்மையான ராஜ ஸ்வபாவத்தின் வாசனையினாலே அந்த நாடகத்திலும்ராஜவேஷமேபூண்டு ‡பெயரில்மட்டும் போலிராஜாவாகி,(அதாவது தனக்குயாதொரு சுதந்தரமுமில்லாதிருக்க, தன்னை சர்வசுதந்திரமுள்ளவனாக நினைத்து இறுமாந்து)சாப்பாட்டுராமனாகி, கரண்டிக்காம்புத் தொழிலே பிரதானமாகக் கொண்டு, தனதல்லாத பிரகிருதிப் பொருள்களாகிய மண்,பெண், பொன், இவைகளில் ஆசைவைத்த அகங்காரத் திருடனாகி, மரணதண்டனைக் காளாகி அதிலிருந்து தப்பிக்கவெண்ணி, *ஆசைப்பேய்பிடித்துப் பாழாய்க்கிடக்கும் மூளையென்னும் கோபுரத்திலேறி அதன் வழியாய்க் கண்ணுக்கெட்டியமட்டும் பார்த்தும் தூக்குமரத்தைத் தவிற வேறொன்றுங்காணாது தவிக்கையில், பூரண ஞானமுள்ள குருவின் வாக்குப்போல் பூரண கோபுரத்திலிருந்து ஆகாசவாணியாய்க் கிளம்பும் காற்றாடியின் சப்தம் "நான் எப்படியிருக்கிறேன் பார், நீயும் என் என்னைப்போலிருக்கக்கூடாது" என்று அன்பெனு நிலவில் கதறிக் கொண்டிருக்கும் தேவகானம்போல் காதில்விழ, உடனே உள்ளத்தில் ஞானவிதை யூன்றப்பெற்றும், மறுபடி பழைய அவித்யாவாசனையால் உலகத்தினாசையிலிழுபட்டு உலகத்து சட்டங்களை படிப்போமா என்றும், வேறெந்த தேசத்துக்குப் போய் எந்தத்தொழில் செய்து உலக சுகங்களை அனுபவிப்போமென்றும் இடையிடையே யோசித்துக் கடைசியில் தான் வெகு உண்மையென்று நம்பியிருந்த அன்பும்பொய்யன்பெனவறியவே திடுக்கிட்டு உலகத்தை அடியோடு வெறுத்து, மறுபடி தூக்குமரத்தை நோக்கி மரணமே உலகத்தில் உண்மையான இன்பமென்று நினைக்கையில், மறுபடி நிலவையும் குருமூர்த்தமாகிய கோபுரத்திலிருந்து குருவாக்காகிய காற்றாடியின் கானம் கன்னத்திலறைவது போல் "என்னை மறவாதே என்னை மறவாதே" என்று கதறுவதையுங்கேட்டு, "இவைகள் என்னவோ கதறிக்கொண்டிருக்கின்றனவே, அதைக் கவனித்துப்பார்ப்போம்" என்று கவனித்துத் தியானத்திலாழ்ந்து பூர்வ புண்யவசத்தால் உய்யும் வழியறிந்து கடைத்தேறிய மனோராஜாவேயொழிய வேறில்லை, என்கிற பெரிய விஷயத்தை அணில் தன்வாலிலொட்டிய மணலைக்கொண்டு சமுத்திரத்தை அணைபோட முயன்றதுபோல் என்புல்லறிவைக்கொண்டு சொல்ல ஆரம்பித்த துணிவை இதைப் படிப்போர்களெல்லாம் மன்னிக்கவேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன். நான் எனையறியாப் பருவத்தே எனை வலியத் தடுத்தாண்டு மாலையிட்டுப்போய், நான் எனையறியும் பருவம் வந்தகாலத்து அவனை உலகெங்கும் தேடிக்காணாது தவிக்கையில், நான் படும்பாட்டைக் கண்டிரங்கி திடீரென்று ஓரிரவு கூப்பிடாமல் கதவைத்திறந்து கண்ணைப்பெயர்க்கவொட்டாத ரூபத்தோடும் கன்னெஞ்சை ஊடுருவித் துளைத்துக்கரைக்கும் பார்வையோடும் என்னுள்ளே வந்துநின்று "நானிங்கேயேதானிருக்கிறேன். நீதான் என்னை இவ்வளவு நாளாய்க் கண்திறந்து பார்க்கவில்லையேயொழிய நான் உனைக்கவனித்துக் கொண்டேதானிருக்கிறேன், நீ எனை மறந்தாயேயொழிய நானுனை மறக்கவில்லை" என்றுசொல்லி நான் திரும்பிப்பார்க்குமிடமெல்லாம் தானாகத்தோன்றி நின்று "நானினி உன்னை விட்டுப்பிரியேன்" என்று வாக்களித்து என் துக்கந்தவிர்த்த கண்ணுண்மணியாகிய நடராஜமணியின் திருவடியில் திரிகாரணசுத்தியோடு இச்சிறுகதையை பகவானுக்குகுசேலர் பிடி அவலைக் கொடுத்ததுபோல் மனப்பூர்வமாய் அர்ப்பித்து அவனோடு பிரியா உறவாய்க்கூடி நானேயவனாகும் பெறற்கரிய பாக்கியம் பெற்றேனென்பதற்கு உலகமெல்லாம் சாக்ஷி! இதைப் படிப்போர்மனமே சாக்ஷி! சத்தியம்—சத்தியம், சத்தியம்! ஓம்தத்ஸத்.

சம்பூர்ணம்,

ஸ்ரீ ராஜநாயகி.

---

* Falsehood cannot exist i? there were no Truth for it to imitate.

†"The footing in Equilibrium, once slightly lost, the natural result is rolling down & down in edl ss births and deaths."-B. R. R.

‡"Bounded by Nature, boundless in his desires, verily man is a fallen god"—*Lamartine.*

* Cf. the passage of the Rigveda about the two similar birds of bright plumage on the same tree one majestic and silent on the top, and the other eating sweet and bitter fruits below.

# SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

# சீதா அல்லது இல்லற வாழ்க்கை

(அதிகாரம். 6-வது)

சேஷய்யர் தன் பெண் தங்கத்தை பள்ளிக்கூடத்தில் வைத்து படிப்புச் சொல்லிக் கொடுக்கும்படி திட்டம்செய்து இருந்தார். ஆனால் செல்லப்பெண்ணானதலால் வாத்தியாருக்கும் அந்தப்பெண்ணை கண்டிக்கக்கூடவில்லை. ஆகையால் என்ன படிப்புசொல்லிக்கொடுத்தும், அப்பெண்ணுக்கு சுவல்ப படிப்புத்தான் வந்தது. பாட்டும் என்ன சொல்லிக்கொடுத்தும் அப்பெண்ணுக்குநல்லகுரல் இல்லாமற் போனபடியால் பாட்டும் வரவில்லை. கடைசியில் பெண்ணிற்கு கலியாண சமயம் வந்துவிட்டதென்று படிப்பை நிறுத்தி விட்டார்கள். சேஷய்யருக்கு அப்பெண்ணை நல்ல டிப்டிகலெக்டர் ஜட்ஜி இப்படிப்பட்ட உத்தியோகஸ்தர் பிள்ளைகளுக்கு நிச்சயம் செய்து வெகு விநோதமாக கல்யாணம் செய்யவேண்டுமென்கிற ஆசை. ஜானகியம்மாளுக்கும் தன் மகள் கல்யாணச்செலவுக்கு என்று குறைந்தது ஐயாயிரம் ரூபாய் எடுத்துவைத்துவிட வேண்டுமென்றும் வெகு சிறப்பாய் கலியாணம் நடத்த வேண்டுமென்றும் ஆசை. இந்த ஆசைக்குத் தகுந்தாப்போல்சேஷய்யருக்கு நாராயணசாமியய்யர் என்கிற டிப்டி கலெக்டர் சினேகமானார். அவர் வரும்போதெல்லாம் சேஷய்யர் வீட்டில்தான் வந்து இறங்குகிறது வழக்கம். அவர் சேஷய்யர்பெண்ணைப்பார்க்கும்போதெல்லாம் நாட்டுப்பெண்ணே வாவா என்று மடியில் எடுத்து வைத்துக்கொள்வார். அவர் பிறந்தவூர் தஞ்சாவூர். சேஷய்யருக்கு எது எப்படியிருந்தபோதிலும் அவர் பிள்ளைக்கே கொடுக்க வேண்டுமென்கிற ஆசையால் தங்கத்தைத் தன் சினேகிதர்களுக்கெல்லாம் டிப்டி கலெக்டர் நாட்டுப்பெண் என்று சொல்லிக்கொள்வார். இந்த சமாசாரத்தையெல்லாம் அறிந்த ஆஷாடபூதி வெங்கிடராம சாஸ்திரிகள் இனிநாம் தாமதிக்கக்கூடாதென்று காமேசுவரய்யரை தனியாய்க் காணப் பிரயத்தினம்செய்து கொண்டிருந்தார். ஒருநாள் காவேரிக்கரையில் சாயங்கால வேளையில் வெங்கிடராம சாஸ்திரிகள் கோறினபடியே காமேசுவரய்யரோடு பேசத் தனியானசமயம் கிடைத்தது. வெங்கிடராம சாஸ்திரி சந்தைக்கு சாமான் வாங்கப்போயிருந்து திரும்பி வந்தார். காமேசுவரய்யர் ஏதோ திட்டுப்பட்டதென்று காவேரியில் ஸ்நானம் செய்ய வந்திருந்தார். இருவரும் ஸ்நானம்செய்துவிட்டு ஜபம்செய்துகொண்டே பேச ஆரம்பித்தார்கள். வெங்கிடராம சாஸ்திரிகள்—அண்ணா உங்கள் வீட்டில் ஒரு கல்யாணம் எங்கள் வீட்டில் ஒரு கல்யாணம் இந்த வருஷம் அவசியம் நடக்க வேண்டியதாயிருக்கிறது.

காமேசுவரய்யர்:—ஆமாம் இந்த வருஷம் தங்கத்துக்கு கட்டாயம் கல்யாணம் செய்யவேண்டும். வீட்டுப் பொண்டுகள் போடுகிறபோடு பொறுக்கக்கூடவில்லை, இந்த வயதிலேயே அவளுக்கு கல்யாணம் செய்துவிட வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கிறார்கள்.

வெங்கிடராம சாஸ்திரிகள்:— ஆமாம் அவள் சொன்னாப்பலே பெண் குழந்தைகளுக்கு சிறுவயதில் கல்யாணம் செய்தால்தான் நன்றாயிருக்கிறது. பாருங்கள் என் வீட்டில் என் மூத்த பெண்ணுக்கு 12-வது வயதில் கல்யாணம் செய்ய யோஜித்து சமயத்தில்வரன் அகப்படாமல் போனவருஷம் என்ன திண்டாட்டம் திண்டாடினேன், பாருங்கள். ஆதலால் சீக்கிரம் கல்யாணம் செய்வதுதான் நல்லது நீங்கள் எங்கே வரன் பார்த்திருக்கிறீர்கள்?

காமேசுவரய்யர்:—நான் இனிமேல்தான் வரன் பார்க்கப்போகிறேன். சேஷன் ஏதோ வரன் பார்த்திருப்பதாகச் சொன்னான். அதுவே சரியாயிருந்தால் வேறே பார்க்கவேண்டியதில்லை.

வெங்கிடராமசாஸ்திரிகள்—:சேஷன் யார் பிள்ளையைப் பார்த்திருக்கிறான். எனக்குத்தெரியாதே.

காமேசுவரய்யர்—யாரோ டிப்டிகலெக்டர் நாராயணசாமியய்யராம்; அவர் பிள்ளையைப் பார்த்திருக்கிறானாம்.

வெங்கிடராமசாஸ்திரி—ஓகோ! அந்தக்குடிகார நாராயணசாமியய்யர் என்று கும்பகோணத்தில் சொல்லிக்கொள்ளுகிறார்களே அவருடையபிள்ளையா!

காமேசுவரய்யர்:—குடிகாரனா! யார் சொன்னது?

வெங்கிடராமசாஸ்திரிகள்—என்ன அண்ணா அவன் சொன்னாப்பலே நான் லோகசஞ்சாரியல்லவா! எனக்குத் தெரியாதவரா! நான் போனவருஷமே என் மைத்துனன் பெண்ணுக்காக போய் அந்த வரனை விஜாரித்ததுதானே. பிறகு இந்த சமாசாரம் தெரிந்தல்லவா விட்டுவிட்டேன்.

காமேசுவரய்யர்:—அப்படியானால் அவர்மூஞ்சியில் கூட விழிக்ககூடாது. எது எப்படியிருந்தாலும் குலம் கோத்திரம் நல்லதாக இருக்கவேண்டும். தீர்த்தம் சாப்பிடக்கூடிய வீடாக இருக்கவேண்டும்.

வெங்கிடராமசாஸ்திரி:—நீங்கள் அந்த வீட்டில் சம்பந்தம் செய்தால் அவன் சொன்னாப்பலே தீர்த்தமே சாப்பிடவேண்டாம். சீசா சீசாவாக உடைத்து சாப்பிடவேண்டியதுதான். ஆனால் அவன் கெட்டிக்காரன். ஒருதடவை அவனும் ஒரு துரையும் இர

ண்டாவது கிளாஸ் வண்டியில் வந்தார்கள். ஒரு ஸ்டேஷனில் வண்டி அரைமணிநேரம் நின்றது. சின்ன ஸ்டேஷன். ஜனங்கள் ஒருவராவது வண்டியில் ஏறவுமில்லை இறங்கவுமில்லை. இவருக்கு கோபம் வந்துவிட்டது. ஸ்டேஷன் மாஸ்டர்மட்டும் இங்குமங்கும் போய்க்கொண்டிருந்தார். நாராயணசாமிய்யர் வண்டிப்பக்கத்தில் ஸ்டேஷன் மாஸ்டர் வந்ததும் அவர் 'ஸ்டேஷன் மாஸ்டரவாள் வண்டிக்குள் வாருங்கள்' என்றார். ஏதோ பெரியமனுஷ்யன் கூப்பிடுகிறானேயென்று வண்டியில் ஏறினார். உடனே அய்யரவாள் இறங்குமென்றார். அவர் அப்படியே இறங்கினார். அய்யரவாள் மறுபடியும் ஏறுமென்றார். ஸ்டேஷன் மாஸ்டர் ஆச்சரியப்பட்டுக்கொண்டு மறுபடியும் ஏறினார். ஏறினதும் முன்போலவே இறங்குமென்றார். பிறகு ஸ்டேஷன் மாஸ்டர் என்ன ஸமாசாரமய்யா என்று கேழ்க்கவும் நாராயணசாமிய்யர்: ஓய் பயித்தியககார பிராமணா இதோ சின்ன ஸ்டேஷன் ஒருவரும் இறங்கி ஏறுகிறதில்லை வண்டியோ அரைமணி நேரம் நிற்கவேணும்! நீராவது ஏறி இறங்கிக்கொண்டிருமென்றார். ஸ்டேஷன் மாஸ்டர் வெட்கப்பட்டுக்கொண்டுபோய் உடனே வண்டியை விட்டுவிட்டார். வண்டி போகும் போதே ஒருசீசாவை எடுத்து நாராயணசாமிய்யர் குடித்தார். துரை தனக்கு கொஞ்சம் கேட்டான். உன் பெயர் என்னவென்றார். அவன் பெயர் இரடு என்றான். நாராயணசாமிய்யர் அவனுக்குக் கொஞ்சம் குடிக்கக் கொடுத்தார். அவன் குடித்துவிட்டு உமது பெயரென்னவென்றான். துரை இரடு என்றதை பார்த்து நாராயணசாமிய்யர் போக்கிரிதனமாக மூடு என்றார். இவர் மூடு என்று சொல்லவும் அவன் கோபித்துக்கொண்டு ஸ் என்றான் இவர் டப் என்றார். துரை ஓய் இது என்னவென்றான். நீ புட்டில் உடைத்த பிறகு உண்டாகும் சப்தத்தைச் சொன்னாய் அதற்கு முந்தி உண்டாகும் சப்தத்தை நான் சொன்னேன் என்றார்.

காமேசுவரய்யர்—சீ! சீ!! இவ்வளவுதானா சேஷன் பார்த்த வரன். நான் சிலாக்கியமென்றல்லவா இருந்தேன்,

வெங்கிடராமசாஸ்திரி—சேஷன் அதை எல்லாம் எங்கே அண்ணா விசாரிக்கிறான். உத்தியோகஸ்தன் என்றால் போதும். அவனுக்கு வேறு குலம் கோத்திரம் விசாரிக்கவேண்டாம்.

காமேசுவரய்யர்—அப்படியானால் அந்த இடத்தில் நான் சம்பந்தம் செய்கிறதில்லை, வேறு இடம் தான் பார்க்கவேண்டும்.

வெங்கிடராம சாஸ்திரி—உங்களுக்கு வேண்டுமானால் நான் தகுந்த இடமாகச் சொல்லுகிறேன். ஆனால் ஒருவேளை அவர்கள் சம்மதிப்பார்களோ என்னமோ தெரியாது, போனவருஷமே அனேகர் கேட்டார்கள். பையனுக்கு மெட்ரிகுலேஷன் பரிக்ஷை பாஸான் பிறகுதான் ஜாதகம் கொடுப்பேனென்று சொல்லிவிட்டான்.

காமேசுவரய்யர்—யார்பிள்ளை? எந்த ஊர்?

வெங்கிடராம சாஸ்திரி—வேறு எங்கேயும் இல்லை. புது இடம் பார்த்தால் அவன் சொன்னாப்பலே கள்ளும் குடியுமாய்த்தான் வந்துசேரும். தெரிந்த இடத்தில் கொடுத்தால் ஒன்றுமில்லை. என் தங்கை வெங்கலக்ஷிமி பிள்ளையைத்தான் சொல்லுகிறேன். பையன் நல்ல புத்திசாலி! சம்பந்தம் நமக்கு இசைந்த சம்பந்தம். ஆனால் அவர்கள் மனது தெரியவில்லை! அனேகமாய் நாராயணசாஸ்திரி சம்மதிக்கமாட்டார்.

காமேசுவரய்யர்:—நாராயணசாஸ்திரி சம்பந்தத்திற்கென்ன பேஷான சம்பந்தமே! அவர்கள் பரம்பரையாய் தகுந்த அந்தஸ்துள்ளவர்கள்: நல்ல குலம்.

வெங்கிடராம சாஸ்திரி:—அதுதான் அண்ணா எனக்குத் தோன்றிற்று. அவன் மட்டும் சம்மதித்தால் நாம் நிச்சயம் செய்துவிடலாம்.

காமேசுவரய்யர்:—நீ விஜாரித்து சொல்லேன்! சம்மதித்தால் நான் அப்படி செய்கிறேன்.

வெங்கிடராம சாஸ்திரி—எங்கே அண்ணா நீங்கள் கொடுக்கிறீர்கள்; சேஷன் கேட்டால் உங்களை சுத்தவைதீகம், என்ன தெரியுமென்பான். அவன் பெண்ணை உத்தியோகஸ்தன் பிள்ளைக்கு கொடுக்கவேணுமென்கிறான், அவன் சொன்னாப்பலே, உத்தியோகஸ்தர்களில் இப்போது குடி சுருட்டு இதுகள் இல்லாதவர்கள் கிடையாது. உத்தியோகம் வந்தவுடனே தலைகால் தெரிகிறதில்லை. தன்னைத்தானே துரையென்று நினைத்துவிடுகிறான். எல்லோரும் தன்னை பிராமணன் என்காமல் துரைஎன்று கூப்பிட்டால் போதுமென்று நினைக்கிறான். பறையனைத்தான் நாம் துரையென்று கூப்பிடுகிறோம் என்பது கூடத் தெரிகிறதில்லை. துரையென்று கூப்பிட்டவுடனே அவன் சொன்னாப்பலே நிஜார் பூட்சுபோட ஆரம்பிக்கிறான். பிறகு சுருட்டு குடிக்கிறான்; பிறகு ஒவ்வொன்றா கலந்துவிடுகின்றது. சிலர் டொப்பிகூட தலையில் வைத்துக்கொள்ளுகிறார்கள்.

காமேசுவரய்யர்:—இனி சேஷன் எப்படிச் சொன்னபோதிலும் நான் கேழ்க்கமாட்டேன்; நீ இந்த இடத்தை நிச்சயம் செய்.

வெங்கிடராம சாஸ்திரி:—அவன் சொன்னாப்பலே நான் நிச்சயமெல்லாம் செய்துவிட்டு வந்தவுடனே நீங்கள் சேஷன் பேச்சைக் கேட்டுக்கொண்டு மாட்டேனென்றால் நான் என்னசெய்கிறது. அப்புறம் எனக்கும் என் மாப்பிளைக்கும் ஜன்ம விரோதம் வந்துவிடுமே. அவன் அவமானம் என்பதே பொறுக்கமாட்டான். அவர் சொன்னால் அவனுக்குத் தவறகூடாது.

காமேசுவரய்யர்:—"உனக்கு கோவிலில் வேண்டுமானால் சத்தியம் செய்து தருகிறேன்." என்று காமேசுவரய்யர் சொல்லவும், வெங்கிடராம சாஸ்திரி உடனே எழுந்திருந்து "நல்லது கோவிலுக்குப்போக

லாம் வாருங்கள்" என்ருர். உடனே காமேச்வரய்யர் கபடமற்றவராதலால் கோவிலுக்குப்போய் அந்தப்பெண்ணை நாராயணசாஸ்திரிகள் பிள்ளைக்கு கொடுப்பதேன்று சத்யம்செய்து கொடுத்தார். பிறகு சாமேசவரய்யர் வெங்கிடராம சாஸ்திரிகளையே அந்தப்பையன் ஜாதகத்தை வாங்கி வரும்படி அனுப்பினூர். இது நிற்க. சிலநாளைக்குப் பிறகு சேஷய்யர் பந்தலூரிலிருந்து வந்து சேர்ந்தார். வந்ததும் காமேசுவரய்யரைக் கண்டு தன்பெண் கலியாண விஷயத்தைப்பற்றி யோஜிக்கலானூர். வீட்டிலோ பெண்டுகள் கலியாணத்திற்கென்று அப்பளாம் வத்தலாட்டம் பொடிமுதல் சகல சாமான்களும் தயார்செய்து வைத்திருந்தார்கள். சேஷய்யர் தான் யோஜித்து வைத்திருந்தபடி டிப்டிகலெக்டர் பிள்ளையின் ஜாதகத்தை வாங்கிக்கொண்டு அதை காமேசுவரய்யரிடம் கலந்து பார்ப்பதற்கென்றே இவ்விடம் வந்திருந்தார். காமேசுவரய்யரிடம் கலந்துபேசி தன் பெண்ணை இப்படி கலெக்டர் பிள்ளைக்கு கொடுப்பதாய் ஜாதகம்பார்க்க வாங்கிவந்ததைச் சொன்னவுடனே, காமேசுவரய்யருக்கு வந்த கோபம் அளவிடக் கூடவில்லை. உடனே எழுந்திருந்து காமேசுவரய்யர் சேஷய்யரைப்பார்த்து: அப்பா உன் இஷ்டம்! நீ பெண்ணைப்பெற்றவன் நீ எங்கே வேண்டுமானூலும் கல்லியாணம் செய்துகொள். நான் இங்கே இருக்கவில்லை எனக்கென்ன பிள்ளையா குட்டியா! நான் காசியாத்திரை போகிறேன்! என்றுசொல்லி வெளியே போய்விட்டார். சேஷய்யருக்கு வருத்தம் பொறுக்கக்கூடவில்லை. அவருக்கு என் காமேசுவரய்யர் இவ்வளவு கோபம் கோபித்துக்கொள்கிருர் என்றுகூட காரணந் தெரியவில்லை. பிறகு அண்ணுவைப் பின்தொடர்ந்துபோக அந்தவூர் பிடாரி கோவிலுக்குப்போய்ச் சேர்ந்தார். போனதும் காமேசுவரய்யர் அம்மனுக்கு நமஸ்காரம் செய்தார். சேஷய்யர் அம்மனையும் பிறகு அண்ணனையும் நமஸ்கரித்து, அண்ணு! தாங்கள் வன் அப்படி கோபித்துக் கொண்டீர்கள்? நான் பார்த்த இடத்தில் எதாவது கெடுதல் இருந்தால் சொல்லக்கூடாதா? என்ருர். காமேசுவரய்யர் சற்று மௌனமாயிருந்து பிறகு நீ பார்த்த இடத்துக்கு நான் கெடுதல் சொல்லலாமா என்ருர். சேஷய்யர் பிறகு அவரைக்கேளாமல் தான் பிரயத்தினம் செய்தது பிசகென்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். அதன் பேரில் காமேசுவரய்யர் அந்த இடம் செஷிப்புள்ள இடமென்றும் சம்பந்தத்திற்கு யோக்கியமல்லவென்றும், எப்படியிருந்தபோதிலும் கமலாவடி கிராம நாராயணசாஸ்திரிகள் பிள்ளைக்குக் கொடுத்தால் தான் அந்த வூரில் இருப்பதாகவும் இல்லாவிட்டால் எங்கேயாவது புறப்பட்டுப்போய் விடுவதாகவும் சொன்ஞர். சேஷய்யர் என்ன சொல்லியும் கேளாததால் பிறகு அந்தப்படியே சம்மதித்து வீட்டுக்கு காமேசுவரய்யரைக் கூட்டி வரவும், அங்கே வெங்கிடராம சாஸ்திரியும் வந்து காத்திருந்தார்.

பிறகு அன்றையதினமே நல்லவேளை பார்த்து சுப்பராய ஜோஸியரைக் கூப்பிட்டு ஜாதகத்தைப் பார்க்ச் சொன்ஞர்கள். வெங்கிடராமசாஸ்திரிகள் நாராயணசாஸ்திரிகள் சொல்படி வந்தவுடனே சுப்பராய ஜோஸியரைப்பார்த்து அவரைத்தான் காமேசுவரய்யர் கூப்பிடுவாரென்றும் கூப்பிட்டால் போய் ஜாதகத்தைப் பார்த்து எதாவது கெடுதல்கள் இருந்தபோதிலும் சொல்லக்கூடாதென்றும்பொருத்தம் சரியாக இருக்கிறதென்று சொல்லவேண்டுமென்றும் அவர் கையில் நூறுரூபாய் கொடுத்து இஷ்டப்படி சொன்னபிறகு மறுபடி நூறுரூபாய் கொடுப்பதாகச் சொல்லிவைத்திருந்தார். அன்றையதினம் மத்தியானமே சுப்பராய ஜோஸியர் வந்து ஜாதகத்தைப் பார்த்து அந்த இரண்டு ஜாதகங்களும் பொருந்தியிருப்பது போல் இதுவரையில் வேறு எந்த ஜாதகமும் பொருந்தியிருந்ததில்லை யென்றும் அந்தப்பெண்ணை வேறே எங்கே பார்த்தாலும் நடக்காதென்றும். அந்த ஜாதகருக்கேதான் அந்தப்பெண் கிடைப்பாளென்றும் ஜோஸியம் சொன்ஞர். சேஷய்யருக்கும் இதைக் கேழ்க்கவே வெகு சந்தோஷமாயிருந்தது. உடனே அந்த ஜோஸியரையே லக்ன பத்திரிகை கொடுப்பதற்கு ஒருநாளைப் பார்க்கும்படி சொல்லி அந்தப்படி ஒருநாளைப் பார்த்து லக்ன பத்திரிகைகொண்டுபோவதற்கு வெங்கிடராம சாஸ்திரிகளையே எற்படுத்தி அவரையும் வீட்டில் பெண்டுகளில் சிலரையும் சேர்த்து அனுப்பினூர். வெங்கிடராம சாஸ்திரிகள் போகும்போது வரதெக்ஷிணை விஷயமாக ஏதாவதுண்டாவென்று கேட்டார். சேஷய்யர் அதெல்லாம் ஒன்றும் பேசக்கூடாது. மாப்பிள்ளைக்கு எங்கள் ஆசைபோல் எதேஷ்டமாய் சீர்செய்வோம்! அதுதான் வரதெக்ஷிணை யென்ருர். வெங்கிடராம சாஸ்திரிகள் அப்படியே ஒப்புக்கொண்டு புறப்பட்டுப்போனூர். சேஷய்யர் உடனே கலியாணத்திற்கு வேண்டிய முயற்சி செய்ய ஆரம்பித்தார். கல்லியாணத்திற்காக உடனே மரூர் நாட்டுக் கோட்டை செட்டியிடத்தில் ரூபா பதிஞயிரம் வாங்கிவந்தார். கலியாணத்திற்கு பந்தற்செலவு 1000 ரூபாய் யென்றும் மாபிள்ளைக்கு 2000 ரூபாயென்றும், பாட்டுக்கச்சேரிக்கு 1000 ரூபாயென்றும், சதிர் முதலானதுகளுக்கு 2000 ரூபாய் என்றும், சீர் வரிசைகளுக்கு 1000 ரூபாயென்றும் இதர செலவுகளுக்கு 3000 ரூபாயென்றும் உத்தேசம் போடப்பட்டது. இதர ஊர்க்காரர்களுக்கெல்லாம் எஙகே பார்த்தாலும் சேஷய்யர் வீட்டுக் கலியாண விமரிசைதெரிந்து பூவரச நல்லூரிலேயே வந்து கூடாரம் அடித்துவிட்டார்கள். கொட்டகை வேலை ஒருமாசத்திற்கு முன்னேமே ஆரம்பிக்கப்பட்டது. பெயர்போன பாடகர்கள் தாசிகள் நாயனகாரர்கள் பாண்டுவாத்தியக்காரர்கள் ஒவ்வாருவரும் சொல்லி யனுப்பப்பட்டார்கள். எவதிகர்ளுக்குமட்டும் சொல்லியனுப்ப வேண்டியதில்லை. நாலுநாளைக்கு முன்னேயே வந்து முகூர்த்தத்தை நடப்பித்துக் கொடுக்கவே வேணுமென்கிற கடிதத்தை எதிர் பார்க்கவேண்டிய அவசியம் பந்துக்களுக்கே யென்றும் தாங்களெல்லாம் சுடிதமில்லாமலே ஒரு மாதத்திற்கு முன்னேயே போய் முகூர்த்தத்தை நடத்திக்கொடுக்க வேண்டிய பாத்தியதை உள்ளவர்களென்றும் நினைத்து எல்லோரும் ஒருமாதத்திற்கு முன்னேயே வந்து கூடி சேஷய்யர் வீட்டிலேயே சாப்பாடும் வைத்துக்கொண்டார்கள்.

(இன்னும் வரும்) எஸ். இராமஸ்வாமீ ஐயர், பி. ஏ.

# தேனீயும் தேனும்.

## I
## பலவகைத் தேனீக்கள்.

ஈக்களில் தேனீ என்பது ஒரு ஜாதி. இந்த ஜாதியில் மலைத்தேனீ, நாட்டுத்தேனீ, கொசுகுத்தேனீ என மூன்று விதமுண்டு. மலைத்தேனீக்கள் உருவத்தில் ஒன்றரையங்குல நீளமுள்ளதாயும், கொடுக்குகள் நீண்டு வளைந்து கூர்மையுள்ளதாயும், தேகம் கருநிறமானதாயுமிருக்கிறது. இது செங்குத்தான குன்றுகளிலுள்ள பாறையிடுக்குகளிலும், உயர்ந்த மரக்கொம்புகளிலும், பெரிய மரப்பொந்துகளிலும் கூடுகட்டுகிறது. இதற்கு மூர்க்க குணமும் கடுங்கோபமும் அதிகம். தங்களுக்குத் தீங்கு செய்ய வருகிறவர்களை மைல்கணக்காகத் துரத்தி விரட்டியடிக்கும் தன்மையுள்ளது. மூன்று ஈக்கள் சேர்ந்தால், ஒரு பலமுள்ள மனிதனை எதிர்த்துக் கொன்றுதீர்க்குஞ் சக்தியுள்ளது. இவ்வீக்களைக்கண்டால் குரங்கு, கரடி முதலிய மதுப்பிரியமுள்ள மிருகங்களுக்கும் அதிக பயம். இதனுடைய ரீங்காரத் தொனியைக் கேட்டவுடன் அவைகள் பறந்தோடிப் பதுங்கிவிடும். இவைகளினுடைய கொடுக்குகள் மட்டும் காலங்குல நீளமுள்ளதா யிருப்பதுடன், கோபமூண்டு கொட்டும்பொழுது நீளும் தன்மை யுடையதாயிருக்கிறது. இவைகள் கட்டும் கூடு அல்லது இராட்டை ஒவ்வொன்று 6 அல்லது 7 அடி சுற்றளவுள்ளதாயும், அரையடி கனமுள்ளதாயும், ஒவ்வொரு அரையும் இரண்டங்குல ஆழமுள்ளதாயும், ஒன்றரையங்குலம் சுற்றளவுள்ளதாயுமிருக்கும். இவைகள் சில சமயங்களில் பனித சஞ்சாரங்குறைந்த மேட்டுப்பாங்கான இடங்களிலுள்ள உயர்ந்த மரக்கொம்புகளிலும், கற்சந்துகளிலும் கூடு கட்டுவதுமுண்டு. இதன் மூர்க்க குணத்தைத் தெரிவிப்பதற்காக நேரில் யாம் கண்ட ஒரு சங்கதியைக் கூறுவது வீணாகாதென்று எழுதியிருப்போம்.

கோயமுத்தூர் ஜில்லா திருப்பூருக்கடுத்த ஒரு மேட்டுப்பாங்கான கிராமத்தில் தோட்டசாகுபடி செய்யப்பட்ட ஒரு பூமியும், அதில் கண்ணாடியைப்போன்ற தெளிவான ஜலத்தையுடைய ஒரு பெரிய கிணறுமிருந்தது. இக்கிணற்றின் அடிப்பாறை மட்டத்திலிருந்து சொந்தக்காரன் நான்கு புறமும் கற்கட்டடங்கட்டி கைப்பிடி சுவரமைத்து, சுண்ணாம்புச்சாந்து பூசி, கிணற்றிலிறங்குகிறவர்களுக்கு அனுகூலமாகப் படிகளுமமைத்து, வெகு சுத்தமாய் வைத்திருந்தனன். தவிர பூமியின் நாலாபக்கமும் தண்ணீர் பாய்ச்சும்படியாக தலைகளுள்ள பக்கத்தில் உயர்த்தி கற்கட்டடங்கட்டி, மேடிட்டு கால்வாய் செய்து, கவலையிறைக்கும் எருதுகளுக்கும் ஆட்களுக்கும் நிழல் தரும்படி பூவரசு மரங்களை வரிசையாய் நட்டு வளர்த்தியுமிருந்தனன். மேற்படி கிணற்றையடுத்து ஓட்டு வில்லைக்கொட்டகையொன்று மிருந்தது.

யாம் ஜீவனார்த்தமாய் இவ்வூரிலிருக்குங் காலத்தில் ஜல சௌக்கியத்தையும் ஏகாந்தத்தையும் விரும்பியபடியால், தூரத்தை இலக்ஷியஞ் செய்யாமல் இக்கிணற்றுக்கு தினம்படி அதிகாலையில் சென்று வேஷ்டிகளைத்துவைத்து ஸ்நான ஜபதபங்களைச் செய்துகொண்டு திரும்புவது வழக்கம். இப்படியிருக்க ஒரு நாள் யாம் இக்கிணற்றுக்கு சென்றபொழுது, இரண்டு கவலைகளும் பூட்டப்பட்டு இருவர் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்ததைக் கண்ட யாம் வழக்கப்படி கிணற்றிலிறங்கி, வேஷ்டிகளைத் துவைத்து ஸ்நானஞ்செய்து விபூதி யணிந்து படித்துறையிலுட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டு ஜபஞ்செய்துக் கொண்டிருந்தோம்.

சற்று நேரத்திற்கெல்லாம் திடீரென்று ஒரு பயங்கரமான சப்தமுண்டாயிற்று. ஊருக்கு இவ்வளவு தூரமான ஏகாந்தமான விடத்திலும் ஜபத்திற்குத் தடைகளுண்டாகிறதே என்கிற மனக்கிலேசத்துடன் கண்களைத்திறந்து பார்த்தோம். தண்ணீர் இறைக்கும் தோல்பரியின் வாய்க்கயிறு அறுந்து பரியிலுள்ள தண்ணீர் மறுபடியும் கிணற்றில் குபீலென்று விழுந்தது தான் சப்தத்திற்குக் காரணமென்று தெரிந்து, மறுபடியும் கண்களை மூடிக்கொண்டு ஜபத்திலுட்கார்ந்தோம்.

சற்றுநேரத்திற்கெல்லாம் ஐயோ! ஐயோ! என்று கவலை இறைக்கிற ஆட்களின் சப்தமும், அம்மா! அம்மா!! என்று கவலை இறைக்கிற எருதுகளின் சப்தமும் கேட்டது. மறுபடியும் ஜபத்திற்கு ஏதோ தடையுண்டாயிற்றே, என்று கண்களைத் திறவாமலே மனதை வெளியில் செலுத்தக் கூடாதென்று உறுதி கொண்டிருக்கையில் கிணற்றுக்குமேல் அழுகையும் கூக்குரலும் அதிகரித்தது. மேலே ஏறிவந்து பார்த்தோம். கவலையிறைக்கும் ஆட்களின் பேரிலும் எருதுகளின் பேரிலும், இவ்வளவு அவ்வளவு என்றுசொல்ல முடியாத மலைத்தேனீக்கள் உட்கார்ந்து தங்கள் கொடுக்குகளால் கொட்டுவதையும், ஆட்களினுடைய தேகமும் எருதுகளின் உடலும் கண்களுக்குப் புலப்படாமல் ஈக்களால் மறைக்கப்பட்டிருட்பதையும், எங்கு பார்த்தாலும் ஈக்கள் ரீங்காரத்தொனியுடன் பறந்து கொண்டிருப்பதையும் கண்டோம். சமீபத்திலுள்ள சிலர் உதவி செய்பவந்தாராயினும், அவ்வீக்களுக்கு ஈடுகொடுக்க ஒருவராலுமாளவில்லை. வந்தவர்களையெல்லாம் இவ்வீக்கள் துரத்தியடித்தன. சிலர், தங்கள் உடலை சாக்கு, துணி முதலியவைகளால் மறைத்துக்கொண்டு தைரியமாகவே நெருப்பு மூட்டி, ஆட்களைத் தூக்கி நெருப்புக்குச் சமீபத்தில் போட்டு, எருதுகளையு மவிழ்த்து நெருப்புக்குச் சமீபத்தில் நிறுத்தினார்கள். இப்படி உதவிசெய்ய வந்தவர்களையும் ஈக்கள் வருத்தாமலிருக்கவில்லை.

தேனீக்கள் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டவைகளென்று சிலர் கூறுவதை யாம் கேட்டிருந்ததுண்டு. ஜபம் செய்வதை விடாமல் கையிலிருந்த ஒரு சிவப்பான பட்டுத்துணியைத் தலைக்குமேல் சுற்றிக்கொண்டேயிருந்து ஈக்கள் சற்று அடங்கிப பிறகு வீட்டுக்குத் திரும்பினோம். எம்மிடத்திலொரு ஈ கூடவரவில்லை. எம்மைக்கொட்டவும் துணியவில்லை. ஈக்களால் துன்பப் படுகிறவர்களுக்கு தேகப்பிரயாசப்பட்டு உதவிசெய்ய மனமிருந்தும், இருந்த இடம் விட்டுப்பெயர, யாம் துணிவு கொள்ளவில்லை. எம்மையும் ஈக்கள் வருத்தியிருந்தால், யாம் செய்தவாய் சகாயஞ் செய்யக்கூட அவ்விடத்திலவர்களுக்கு ஒருவருமில்லை. கவலையாட்களின்பேரிலும் எருதுகளின்பேரிலும் உரோமக்கால்கள் தவறாமல் ஈக்களினுடைய முட்கள் ஏறியிருந்தன. ஆட்களின் தேகமும், எருதுகளின உடலும் ஒருமணி நேரத்திற்குள்ளாக பூதாகாரமாய் வீங்கிப் பருத்துவிட்டது. ஒரு மனிதனும் மூன்று எருதுகளும் அன்று சாயந்திரத்திற்குள்ளாகவே இறந்துபோக, மறுநாள் மற்றொரு எருதும் அதேகதியடைய, ஒரு ஆள்மட்டும் பிழைத்தானாயினும் வெகுநாள் வரையில் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்து, தன் ஜீவகாலமெல்லாம் வேலைக்கு உபயோகமற்றவனாக விருந்தான். உதவிசெய்ய வந்தவர்களிலும் சிலர் வெகுநாள் வருத்தப்பட்டார்கள்.

கிணற்றுத்துலைக்கு அடியிலிருந்த ஒரு பொந்தில் அவ்வீக்கள் வெகுநாளாக வாசஞ்செய்துக் கொண்டிருந்தனவாம். ஆனால், பத்துப்பதினைந்து ஈக்களுக்கு அதிகமாக இத்தோட்டக்காரர்கள் எப்பொழுதும் கண்டதில்லையாம். இப்பொழுது வெளிப்பட்டவைகளை ஒரு உத்தேசமாய்க் கணக்கிட்டாலோ அறுபதினாயிரத்திற்குக் குறையாது. தோல்பரியின் வால் கயிறு அறுந்து, தண்ணீர் குபீலென்று கீழ் நோக்குகையில் மேற்படி ஈக்களின் கூடிருந்த விடத்திற்கு, பொந்துவழியாக ஜலம் உட்பிரவேசிக்கவே, ஈக்களுக்கு உக்கிரம் பிறந்து இவ்வாறு நேர்ந்ததாகத் தெரிபவந்தது. மறுநாள் அவ்விடத்தில் சிற்சில இறந்த ஈக்களினுடைய உடல்களைத்தவிர, உயிருள்ள ஈ ஒன்றாவது காணப்படவில்லை. இந்த விடம் இனி வாசத்திற்குத்தகுந்ததல்லவென்று கண்டு வேறு இடம் போயிருக்கவேண்டும். கிணற்று கற்கட்டைப் பிரித்துப்பார்க்கும்பொழுது ஐந்தரையடி சுற்றளவுள்ள ஏழு கூடுகளிருந்தன. சில கூடுகளில் மட்டுமே தேனிருந்தது. சில கூடுகளில் ஈ முட்டைகளும், பக்குவமடையாத குஞ்சுகளுமே இருந்தன. எடுக்கும்போதே செலவுசெய்யபட்டது போக 23 படி சுத்தமான தேன்கிடைத்தது.

இம்மாதிரியான மலைத்தேனீக்கள், ஆனைமலைக்கடுத்த உடைய குளம் என்கிற கிராமத்திற்கு சமீபத்திலுள்ள தேன் கரடு என்ற குன்றின் செங்குத்தான பாறையின் அடிப்புறத்தில் ஏராளமான கூடுகள் கட்டிக்கொண்டு வசிக்கின்றன. இக்கூடுகள் ஒவ்வொன்றும் தூரப்பார்வைக்கு முழுச்சாக்கு மூட்

ண்டைகள் போல் காணப்படுகின்றன. இவ்விடத்திலிருந்து தேன் எடுப்பது மகா கஷ்டமும் பயங்கரமுமான செய்கை. செங்குத்தாய் சற்று வளைந்து நிற்கப்பட்ட பாரையின் உச்சியில் இரும்புகடப்பாரை கொண்டு இடித்து இரண்டடி ஆழமுள்ள துவாரஞ்செய்து, அதில் அக்கடப்பாரையையேமுளையாக வடித்து, இதற்கென்றே தயார் செய்து வைத்திருக்கிற சமீபகணுக்கிளையுடையதும், 50, 60 அடி நீளமுள்ளதும், ஒரு புறத்தில் கொக்கி மாதிரி வளைத்துக் கட்டியும், மற்றப்புறத்தில் துவாரஞ்செய்து சில முளைகளையடித்ததுமான பிரம்பைக்கொண்டுவந்து, மேற்படி பாறையிலடித்த முளையில் மாட்டி, உற்ற துணையை முளையண்டை நிறுத்தி விட்டு, கணுக்களையுடைய பிரம்பின் வழியாய் ஒருவன் கீழே இறங்குவான். ஒருகையில் தீக்கொளுத்திய ஒரு பந்தத்தைஎடுத்துக்கொண்டும், தேன்கூடுகளை எடுத்து வரத்தகுந்த ஒரு வலையை இடையில் கட்டிக்கொண்டும், பிரம்பின் கணுக்களில் கால் விரல் சந்திறைப் பற்றிக்கொண்டும் போவான். ஒரு கஜம் கீழே போய்விடுவானுனல், மேலே இருக்கப்பட்டவன் இவனைக் காணமுடியாது. சுமார் 200 கஜத்திற்குகீழே பூமியானது கல்லும் கரடுமாய்க்காணப்படும். கீழே பிரம்பின்வழியாக இறங்கினவன் தேன் கூடுகளை எட்டக்கூடிய அளவில் நின்று ஊசலாடுவதுபோல் பலதடவைகள் ஆடி தேன் கூடுகளிலிருக்கப்பட்ட விடத்தைச் சேர்ந்து தீக்கொளுத்திய பந்தத்தினுல் ஈக்களைச் சுடுவான். இரண்டு மூன்று தடவை இவ்விதம் சுட்ட பிறகு, தேன் கூடுகளை அறுத்தறுத்து, தன் அரையிலுள்ள வலையை எடுத்து பிரம்பின் முளையில் கட்டி, அதில்போட்டுவிட்டு மேலே இருக்கப்பட்டவனுக்கு சமிக்கை செய்து ஏறி வந்துவிடுவான். பிறகு பிரம்பை இழுக்க தேன் கூடுகளையுடைய வலையும் வந்துவிடும். ஒருதடவையில் சுமார் 40-படிக்குக் குறையாத தேனுள்ள கூடுகளை எடுப்பான். இப்படி ஒரு தினத்தில் இரண்டு தடவைக்கு மேல் எடுக்க ஏலாது. இறங்குகிறவன் தன் சொந்த பணிவியைத்தவிர வேறு ஒருவரையும் மேற்படி முளையண்டை நம்பிவைப்பதில்லை. இவ்வேலையில் தேர்ந்தவர்கள் அப்பிராந்தியங்களில் ஒருவரிருவருக்கு அதிகமாயிருக்கமாட்டார்கள். இவர்களைக் கொண்டே பலசமயங்களில் இப்பேர்க்கொத்த விடங்களிலுள்ள தேன்களை எடுக்கப்படுகிறதாகத் தெரியவருகிறது. இவர்களை இத்தேனீக்கள் எவ்விதத்திலும் வருத்துவதில்லை.

2. நாட்டுத்தேனீக்கள் பல விடங்களிலும் காணப்படும். இதில் மூன்று விதமுண்டு. ஒரு அங்குல முள்ளவைகளை பெருந்தேனீ என்றும், அரையங்குல முள்ளவைகளை கொம்புத் தேனீ என்றும், காலங்குல முள்ளவைகளை சிற்றீ என்றும், சொல்லப்படுகிறது. இவைகளில் பெருந்தேனீக்களும், கொம்புத் தேனீக்களும், கருஞ்சிவப்பு நிறமானது. சிற்றீக்கள் கருமையாகவே காணப்படுகின்றன. இவைகள் மரக்கொம்பு, கற்சந்து, மரப்பொந்து முதலிய விடங்களில் கூடுகட்டுகின்றன. இவைகளில் சிற்றீக்களை விட கொம்புத் தேனீக்கள் கொடியவை. கொம்புத் தேனீக்களை விட பெருந்தேனீக்கள் கொடியவை. இவைகளெல்லாம் மலைத்தேனீக்களைப்போல அவ்வளவு மூர்க்க குணமுள்ளவல்லவாயினும், தங்களுக்கு இடர் செய்பவர்களைக் கொட்டாமலும் வருத்தாமலுமிராது. இவைகளில் கொம்புத் தேனீக்களால் சேர்க்கப்பட்ட தேனே அதிக மதுரமானது.

3. கொசுகுத்தேனீ என்பது மிகவும் சிறியது. இது அளவில் சாதாரண சிக்காடு, கொசுகு முதலியவைகளைவிட சற்று பெரியது. இது அதியுஷ்ணமான விடங்களில் மட்டும் கற்சந்துக்களில் கூடுகட்டும். இது சேர்க்கும் தேனை எடுப்பவர்களைத் தீங்குசெய்யத் தகுந்த கொடுக்கு இதற்கில்லை. ஆனுல் சற்று கடிக்கும். இவைகளினுடைய கூடும் அதிக சிறியது, தேனுமதற்குத் தக்கின அளவாகவேயிருக்கும். இத்தேன் ஔஷதங்களுக்கு மிகவும் சிரேஷ்டமானதென்று நம்பப்படுகிறது.

## தேன்.

தேனென்பது நானுவிதமான புஷ்பங்களினின்றும் தேனீக்கள் அலைந்து திரிந்து எடுத்துக்கொண்டுவந்து தங்கள் கூட்டில் சேர்க்கப்பட்ட மதுரமான திரவப்பொருளெனக் கூறலாம். இதில் சர்க்கரை, மெழுகு, புஷ்பசத்து, ஜலம், சாயம் முதலியவைகள் சேர்ந்திருக்கின்றன. ஈக்கள் தங்கள் வாயால்

புஷ்பங்களிலுள்ள தேனைக்குடித்து மறுபடியும் அவற்றை வெளிப்படுத்தி, சேர்க்கப்பட்டதாயினும், மனிதர்கள் அதை நிந்தியாமல் வெகு சிரேஷ்டமாகக் கொள்ளுகிறார்கள். இது ஒன்றைத்தான் இப்படி எடுத்துக்கொள்ளுகிறார்களோ வென்று ஆராயுங்கால்—

“ தாமரை பொன்முத்து சாமரை கோரோசனை பால் பூமருதேன் பட்டு புனுகு சவ்வாதாமழன் மற்றெங்கே பிறந்தாலுமெள்ளாரே நல்லோர்களெங்கே பிறந்தாலுமென்.”

இப்படி பொருளின் குணத்தைப் பார்த்து எடுத்துக்கொள்வதும், அவை பிறந்த விடத்தைப்பற்றிக் கவனியாமலிருப்பதும் மானிடருக்கு சகஜம். தேனானது ஈக்கள் எடுக்கும் புஷ்பத்தின் தன்மைக்குத் தக்கபடி நிறம், உருசி, முதலியவைகளில் பேதப்படுகிறது. சில புஷ்பங்களிலிருந்து எடுத்து சேர்க்கப்பட்ட தேன் இரத்தநிறமாயிருக்கிறது. வேறு சில புஷ்பங்களிலிருந்து எடுத்து சேர்க்கப்பட்ட தேன் கசப்பாயிருக்கிறது. தவிர, தேன் சேகரிக்கப்பட்ட காலத்தையனுசரித்தும் தேனின் குணம் வித்தியாசப்படும். வாஸ்தவத்தில் மழைகாலத்தில் சேர்க்கப்பட்ட தேனில் ஜலம் அதிகமாயிருக்கும். அது வெகு சீக்கிரத்தில் புளித்துப்போம்.

## தேன்கூடு.

இது ஈக்களின் ஜாதிக்கும் சங்கியைக்கும் தக்கபடி பெரிதாயும் சிறியதாயுமிருக்கிறது. அநேகமாய் எருமுட்டையைப்போல் வட்டமாகவும், கூடுகட்டப்படுமிடத்திற்குத் தக்கபடி நீண்ட வட்டமாகவுமிருக்கும். காட்டுத் தேனீக்களின் கூடுகள் எவ்விடத்திலும் மூன்றங்குல கனத்திற்கு அதிகமாயிராது. எருமுட்டையின் இருபுறமும் துவாரங்களமைக்கப்பட்டு, நடுவில் இடைவெளியின்றி தடுக்கப்பட்டு, துவாரங்களெல்லாம் அறுகோணமாய்ச் செய்யப்பட்டிருந்தால் எப்படி காணப்படுமோ அப்படியே அநேகமாய்த் தேன்கூடுகள் காணப்படுகின்றன. அவ்வாறுகோணவறைகளே அவைகளுக்குத் துயிலிடமாகவும், பறக்கச் சக்தியில்லாத சிறிய ஈக்களின் உறைவிடமாகவும், முட்டையிடும் பிரசவவீடாகவும், தேனைச் சேகரித்து வைக்கும் பண்டசாலையாகவும், உபயோகப்படுகின்றது. இவ்வறைகளுடன் கூடுமுழுவதும் மெழுகினாலே செய்யப்படுகின்றன. அறைகளெல்லாம் ஒரே அளவானதென்றே சொல்லக்கூடியதாயினும், மத்தியிலுள்ளவைகளைவிட ஓரத்திலுள்ளவைகளின் ஆழமானது குறைந்திருக்கும். தேனீக்கள் தங்கள் கூடுகளிலுள்ள இன்ன அறைகளில்தான் முட்டையிடவேண்டுமென்றும், இன்ன அறைகளில்தான் குஞ்சுகளிருக்கவேண்டுமென்றும் இன்ன அறைகளில்தான் தேன் வைக்கப்பட வேண்டுமென்றும் ஏற்பாடு செய்துக்கொள்ளுகிறதென்று கூறத்தக்கதாக கூடுகளின் ஒருபுறமுள்ள பல அறைகளில் முட்டைகளே காணப்படுகின்றன. மற்றொருபுறமுள்ள பல அறைகளில் குஞ்சுகளே உறங்குகின்றன. வேறொருபுறமுள்ள பல அறைகள் தேனினால் நிறைந்து விளங்குகின்றன. ஆகவே நாகரீகமடையாதவர்கள் வீட்டில் சமையலறையில் படுக்கையறை சாமான்களும், தரிசனவறையில் சமையல் பாத்திரங்களும் ஒழுங்கீனமாகக் காணப்படுவதுபோலன்றி, நாகரீகத் தேர்ச்சியடைந்தவர்களுடைய வீடுகளைப்போலக் காணப்படுகின்றன. ஒரு கூண்டின் ஈக்களின் பேரில் சர்வாதிகாரம்பெற்ற இராணி ஈ வசிப்பதற்குத்தகுந்த இராஜமாளிகையெனக் கூறக்கூடிய ஒரு பெரிய அறையும், அதற்குக் கீழதிகாரிகளான சில ஈக்கள் வசிக்கத்தகுந்த, இராஜமாளிகைக்குச் சற்று சிறியதான சில அறைகளும், கூட்டின் சிகரத்திலாவது அடிப்புறத்திலாவது காணப்படுகிறது. இவ்வறைகள் மட்டும் அறுகோணமாயில்லாமல் வட்டமாயிருக்கின்றன.

## மெழுகு.

சிலந்திப்பூச்சிகள் முசுக்கொட்டைச் செடியின் இலைகளைத்தின்று தங்கள் உடலிலிருந்து உண்டாகிற ஒருவித மெல்லிய பதார்த்தத்தினால் தங்கள் கூடுகளைக் கட்டுவதுபோல, தேனீக்களும் புஷ்பங்களிலுள்ள மதுரமான தேனைக்குடித்து தம் உடலிலிருந்து உற்பத்தியாகிற மெழுகினாலேயே தம் கூடுகளைக் கட்டுகின்றன. தாங்கள் குடிக்கும் தேனையே மெழுகாக மாற்றக்கூடிய சக்தியவைகளுக்குளது. தேனீக்கள் தாம் கூடுகட்டிக்கொண்டு வாசஞ்செய்யப்பட்ட விடத்தில் எவ்வித இடஞ்சலாவது நேர்வதாயிருந்தால், அவ்விடத்தைவிட்டு வேறு தகுந்தவிடத்தைத் தேடிக்

கொண்டு பெருங் கும்பலாகப் புறப்பட்டுப் பறந்துபோவதையநேகர் பார்த்திருக்கலாம். அப்படிப் போகும்பொழுது அவைகள் தாம் முன்னிருந்த கூண்டில் சேகரித்துவைத்த தேனை வேண்டிய அளவு குடித்துவிட்டே செல்லும். அப்படியும் குடித்துவிட்டுச் செல்ல சாத்தியப்படாவிட்டால், தாம் வேறு புகலிடம் கண்டிபிடிக்கச்செல்லும் மார்க்கத்திலுள்ள செடிகளின் புஷ்பங்களிலுள்ள தேனை ஏராளமாய்க்குடித்து, கடைசியில் ஓரிடத்தில் சபைகூடும். அதாவது அதிக காற்றில்லாததும் வெயிலடிக்கக் கூடியதுமான ஓரிடத்தில் மரக்கிளையொன்றைப் பற்றி சில ஈக்கள் உட்கார, அவைகளின்பேரில் வேறு சில ஈக்கள் உட்கார, இப்படியே ஒன்றின் பேரிலொன்றாக எல்லா ஈக்களுமுட்கார்ந்து பெருங்கும்பலாக சுமார் ஒருநாளெல்லாம் தொங்கிக்கொண்டேயிருக்கும்.

இவைகளிப்படியிருக்க, கீழதிகாரிகளான சில ஈக்கள் தகுந்த புகலிடத்தைத் தேடிக் கண்டுவந்து இவைகளுக்குத் தெரிவித்து, அவ்விடத்திற்கு இவைகளையழைத்துக்கொண்டு செல்லும். இப்படிப் புதியவிடத்திற்குச் செல்லுமுன் ஒரு மரக்கிளையைப் பற்றிக்கொண்டு தபசிகளைப்போல் தொங்கிக்கொண்டிருந்ததை சபையென்று கூறினோமன்றோ. சபையின் நடவடிக்கைகளை நீங்கள் அறியவேண்டியது அவசியமாதலால் அதையும் கூறிவோம். காற்றுவாட்டமில்லாமல் வெயிலடிக்கப்பட்ட ஓரிடத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சபைகூடி அதிகநேரம் பேசிக்கொண்டேயிருந்தால், அவர்களுடைய தேகத்தில் புழுக்க மிகுத்து வியர்வை வெளிப்படுவது சகஜந்தானே! அதிலும் சபையோர்களெல்லாம் லாகிரி பதார்த்தங்களையுண்டு தலைகால் தெரியாதவர்களாய் ஒருவர்மேலொருவர் விழுந்து கிடந்தால், அவர்களுடைய தேகத்திலிருந்து வியர்வை ஜலம் மழைபோல் பொழியாமலிருக்குமோ? அப்படியே தேனீக்களும் தங்கள் தேகத்திற்கு விசேஷ அனலைக் கொடுக்கக்கூடிய மதுவையுண்டு, குடியர்களைப்போல் ஒன்றின்மேலொன்றாயும், பத்தாயிரக்கணக்காயும் உட்கார்ந்திருந்தால், சூடுண்டாகி அவைகளின் தேகத்திலிருந்து பாளம்பாளமாகவும் தகடுதகடாகவும் மெழுகு வெளிக்கிளம்புகிறது. அங்ஙனம் வெளிப்பட்டுக்கொண்டிருக்கும் மெழுகை சிற்சில ஈக்கள் எடுத்துக்கொண்டுபோய் கண்டுபிடிக்கப்பட்ட நூதனவிடத்தில் கூடுகட்டத் தொடங்கும்.

"வான்குருவியின் கூடு வல்லரக்குத்தொல் கறையான்,
தேன்சிலம்பி யாவருக்குஞ்செய்யரிதால்—யாம்பெரிதும்,
வல்லோமேஎன்று வலிமைசொல் வேண்டாங்காண்,
எல்லோர்க்கு மொவ்வொன்றெளிது."

என்றபடி, மற்றவர்களுக்குத் தேன்கூடுகட்டுவது கஷ்டமானதேயன்றி, ஈக்களுக்கு மிகவும் எளிதானதே. எப்படி என்றால்:—பிடித்தால் பிள்ளையாரென்பதுபோல, சர்வாதிகாரியான இராணி ஈயானது, அஸ்திவாரக்கல் நாட்டுவதுபோல, ஓரிடத்திலுட்கார்ந்து தன்னுடலின்பேரிலுள்ள மெழுகை வைத்து இரண்டு மூன்று தடவையசைந்து, வெளியேவந்து உட்சென்று, மறுபடியும் முன்னும் பின்னுமாக அசையவே, ஒரு அறையுண்டாகும். இதுவே அரசமாளிகை இதற்கு சமீபத்தில் கீழதிகாரிகளான சில ஈக்களும் அவ்விதமேயுட்கார்ந்து தங்கள் அறைகளையும் செய்ய, மற்ற ஈக்களும் அவற்றையடுத்து உட்கார்ந்து வரிசைக்கிரமமாக வீடுகளைச் செய்துக்கொண்டேவரும். இப்படி ஒருபுறத்தில் சில ஈக்கள் அறைகளையமைக்க வேறு சில ஈக்கள் மறுபுறத்தில் அறைகளைச்செய்து கூட்டை முடிவுசெய்யும். ஈக்கள் ஆறுகால் பிராணிகளானதால், தம்மறைகளையும் அறுகோணமாய் அமைக்கிறதென்று எண்ணவும் கூடும். வட்டமாகவே அறைகளைச் செய்கிறதென்று வைத்துக்கொண்டாலும், அவைகள் இரண்டு வரிசையான ஆறுகால்களையும், இரண்டு இறகுகளையும் மடக்கிக்கொண்டு தங்கள் அறைகளுக்குள் செல்லுகிறபடியால், கால்களினால் இரண்டு மடிப்புகளும் இறகுகளினால் நான்கு மடிப்புகளுமுண்டாய், அறைகள் சம அளவுள்ள அறுகோணவீடுகளாய் அமைகின்றனவென்று கூறத்தகும். இப்படி ஒவ்வொரு ஈயும் தன் தேகத்திலுண்டான மெழுகை ஒன்றுக்கு சமீபத்திலொன்றாய் வைப்பதால், ஒவ்வொரு அறைக்குமுள்ள ஆறு சுவர்களும் இரட்டை சுவர்களாய் ஏற்பட்டுவிடுகின்றன. இது முடிந்தபிறகு கூண்டின் பொது வேலை

களாகிய சுற்றுச்சுவர் போடுதல், தப்பித்தவறியிருக்கும் இடுக்குகளையும் துவாரங்களையும் சரிபடுத்தல், கரடு முரடுகளைச் சமன்படுத்தல் முதலிய வேலைகளை சில ஈக்கள் மேற்கொண்டு தங்கள் கால்களையே, மெழுகுத்தகடுகளை எடுக்கும் இடுக்கியாகவும், நாவையே கரணையாகவும், உமிழ்நீரையே சாந்தாகவும் உபயோகப்படுத்தி வேலையை முடிக்கும்.

தேனீக்கள் தங்கள் சங்கைக்கும் சக்திக்கும் தக்கின அளவாய் கூட்டைக்கட்டத்தொடங்கி 24-மணி நேரத்திற்குள் முடிக்கின்றனவேயன்றி, நம்மவரைப்போல் கையிலுள்ள பணத்தையெல்லாம் அஸ்திவாரத்திற்கும் கட்டத்திற்குமாகச் செலவிட்டு, கூரைபோடக் கையிற் தொகையில்லாமற் கடன்பட்டு, அதையொருவாறு ஒப்பேற்றி, சாந்துபூசி வெள்ளையடிக்கக் கையில் பொருளில்லாதவர்களாய், வருஷக்கணக்காய் வீட்டை யப்படியே வைத்துக்கொண்டு, தங்களுக்கனுகூலமாய் கன்னடபாஷையில் "மனேகட்டிநோடு, மதுவே மாடிநோடு" என்ற பழமொழி ஏற்பட்டிருப்பதை நினைத்து திருப்தியடைவது போல தேனீக்கள் இருப்பதில்லை. ஒரு கூட்டத்தை சேர்ந்த ஈக்களெல்லாம் வீடுகட்டுகிற வேலையிலேயே இருந்தால் எப்படி சாத்தியம்? ஆகாரம் வேண்டுமே? அக்காலத்தில் சில ஈக்கள் பிரவேசித்து செய்துக்கொண்டே யிருக்கும். சிற்சில ஈக்கள் எட்டு, பத்து மைல் தூரஞ்சென்று தேனை எடுத்துக்கொண்டு வந்து சேர்க்கும்.

நீலகிரி மலையில் கட்டை என்று ஒருவிதமான செடி உண்டு. இது பனிரண்டு வருஷத்திற்கொருமுறைதான் புஷ்பிக்கிறதென்று கூறுகிறார்கள். அதிலும் தொதவனட்டிலுள்ள செடிகள் புஷ்பித்து ஆறுவருஷமான பிறகுதான் பறங்கிநாட்டிலுள்ள செடிகள் புஷ்பிக்குமென்றும், பறங்கினட்டிலுள்ள செடிகள் புஷ்பித்து ஆறுவருஷமான பிறகுதான் மறுபடியும் தொதவனட்டில் புஷ்பிக்குமென்றும் கூறுகிறார்கள். யாம் பரீக்ஷித்தவரையில் அது உண்மையென்றே நம்பவேண்டியிருக்கிறது. இந்தச் செடிகளில் மலரும் புஷ்பங்களும் அதிகம், புஷ்பங்களில் தேனும் அதிகம். புஷ்பங்களைப்போலவே தேனின் நிறமும் இரத்தச் சிவப்பாயிருக்கும். ஒரு சமயத்தில் பறங்கினட்டிலுள்ள ஓரிடத்தில் எடுக்கப்பட்ட தேன், கட்டை புஷ்பத்தினின்று எடுத்து சேகரிக்கப்பட்டதேனுகையிருந்தது. பறங்கிநாட்டில் அப்பொழுது அப்புஷ்பமே கிடையாது. அப்படியிருக்க ஈக்கள் தொதவனட்டிலிருந்தே அத்தேனைக் கொண்டுவந்து சேகரித்திருக்கவேண்டுமென்று நம்பப்போதுமான காரணங்களிருந்தன. இதனால், ஈக்கள் பத்துமைல் தூரத்திற்கப்பால் சென்றும் தேனைத்தேடிக்கொண்டு வருகிறதென்று விளங்கிற்று.

### ஈக்கள்.

ஒவ்வொரு கூண்டிலும் இராஜமாளிகை என்று ஒரு வட்டமான பெரிய அறையும் அதையடுத்து அதிகாரிகள் வசிக்கும் வேறு சில வட்டமான அறைகளுமுண்டென்று முந்தியே கூறியிருக்கிறோம். இராஜமாளிகையில் வசிக்கும் இராணி ஈயும், அதிகாரிகளான வேறுசில ஈக்களும் உருவத்தில் மற்ற ஈக்களைவிடப் பெரியது. இவைகள் மற்ற ஈக்களைப்போல ஓடியாடித்திரிந்து பாடுபடுகிறதில்லை. மற்ற தேனீக்கள் பாடுபட்டு சேர்க்கிற தேனை இவைகள் குடித்து யாதொரு வேலையும் செய்யாமலிருக்கிறபடியால், உடல் பருத்து பறக்கச் சக்தியற்றவைகளாய் கூண்டையே காத்துக்கொண்டிருக்கின்றன. இவ்வீக்களே முட்டையிட்டு குடும்ப விருத்தி செய்கின்றனவென்று எண்ணப்படுகிறது. அம்முட்டைகள் சீக்கிரத்தில் வெண்புழுக்களாய்மாறி, பிறகு இறகுமுளைத்து ஈக்களாக வெளிப்படுகின்றன. இராணி ஈயும் அதிகாரி ஈக்களுமிருக்கிறவரையில் மற்ற ஈக்கள் பிரிந்துபோவதில்லை. எக்காரணத்தினலாவது இவ்வீக்கள் இறந்துபோய்விட்டால், மற்ற ஈக்களும் பிரிந்துபோய்விடும். அரசனில்லாத ஊர் பாழ் என்பது பொய்யன்றே. சிற்சில கூண்டுகளில் இராணி ஈக்கள் இரண்டு வருஷத்திற்கதிகமான காலமுயிருடனிருந்ததாகவும் தெரியவருகிறது. இத்தேனீக்களையும் வியாதிகள் சில சமயங்களில் வருத்துகின்றன. மனிதர்களால் அமைக்கப்படுகிற விடங்களில் வந்து சேர்ந்து, கூடுகட்டிக்கொண்டிருக்கின்ற ஈக்களில் அநேகம் திடீரென்று இறந்துவிடுகின்றன. இப்படி இறந்துபோவது அநேகமாய் ஒருவிதமான ஊதல் காற்றடிக்கும் சமயமே என்று எண்ணப்படுகிறது.

சாதாரணமாய் தேன் சேகரிக்கிறவர்கள் அங்கங்கே வனங்களிலும் குன்றுகளிலும் காணப்படுகிற தேன்கூடுகளைக் கலைத்து தேன் எடுக்கிறார்களே தவிர, தேனீக்களை வளர்த்தி வாலிபம் பண்ணித் தேன் எடுப்பதுண்டென்று கேட்டிருக்கமாட்டார்கள். ஐரோப்பாவிலுள்ள சில தேசங்களில் தேனீக்கள் கூடு கட்டத்தகுந்த வசதியான இடங்களை அவ்விடத்திலுள்ளவர்கள் அமைப்பதாகவும், அதில் தேனீக்கள் தங்கள் கூடுகளைக் கட்டுவதாகவும் அவைகளிலிருந்து தேனையவர்கள் வேண்டியபொழுது எடுத்துக்கொள்வதாகவும் அறிகிறோம். அப்படியே நீலகிரி மலையின்பேரில் ஐரோப்பிய தோட்டக்காரர்களில் பலரும் மற்றவர்களில் சிலரும் செய்துவருவதை யாம் நேரில் பார்த்து வருகிறோம். இவர்கள் தேனீக்கள் வந்து கூடுகட்டுவதற்கு வசதியான தகுந்தவிடத்தில் ஒரு சிறிய குடிசைசெய்து, அதில் பெரிதான இரண்டு மூன்று பானைகளுக்கு ஈக்கள் நுழையும்படியான சிறிய துவாரங்களைச்செய்து, ஒரு பலகையின்பேரில் கவிழ்த்து வைக்கிறார்கள். இப்பானைகளுக்கு வாசனையுண்டாக்கும்படியாக கொஞ்சம் வெண்ணெய் பூசிவைப்பதுண்டாம். சிறிது நாளைக்குள் ஈக்கள் இந்த சுகமான விடத்தைக்கண்டு பானைகளிலுள்ள துவாரங்களின் வழியாக உட்சென்று கூடுகள் கட்டத் தொடங்கிவிடுகின்றன. அமாவாசைக்கு நான்குநாள் முந்தியே, பானையொன்றுக்கு ஒன்று இரண்டு கூடுகளை விட்டுவிட்டு மற்றவைகளை எடுத்துக் கொள்ளுகிறார்கள். அவற்றிலும் எந்தக கூண்டுகளிலும் தேன் அதிகமாயிருக்கிறதோ அவைகளை எடுத்துக்கொள்ளுகிறார்கள். முட்டைகளும் குஞ்சுகளும் அதிகமாயிருக்கப்பட்ட கூடுகளை எடுத்துவிட்டால் ஈக்கள வேறு இடத்திற்குப் போய்விடுமென்று கருதப்படுகிறது. அமாவாசைக்குப் பிந்தி எடுத்தால் கூடுகளில் தேன் அதிகமாயிருப்பதில்லையாம். சூரிய அஸ்தமானத்திற்குப் பிறகு கூடுகளை எடுப்பதானால், ஈக்கள் அவ்வளவாகக் கொட்டுவதில்லையாம். இப்படி மனிதர்களுடைய இஷ்டப்படி கூடுகட்டுகிற தேனீக்கள் நாட்டுத்தேனீயில் கொபபுத்தேனீ என்ற ஜாதியே அதிகம். இப்படி தேனைக்கூடுகளிலிருந்து எடுப்பவர்கள் சிலர் கூடுகளை அழுத்திப் பிழிந்துகொள்ளுவார்கள். மற்றும் சிலர் கூடுகளை முறித்து ஒருபாத்திரத்தில் போட்டு கொஞ்சம் காச்சுவார்கள். தேன் உருகின உடனே வடிக்கட்டி எடுத்துக் கொள்ளுவார்கள். காய்ச்சி எடுக்கப்பட்ட தேன் வெண்மையாகக் காணப்படுகிறது. ஆனால் சீக்கிரத்தில் கற்கண்டாய் விடுகிறது. காய்ச்சின தேனிலிருந்து எடுக்கப்பட்ட மெழுகு அதிக கடினமானதாய் விடுகிறது. கூண்டிலுள்ள முட்டைகளையும் ஈக்களையும் அழுத்திக்கொன்று விடாமல் தேனைமட்டும் எடுத்து வைத்தால் வெகுகாலம் கெட்டுப்போகமலிருக்கும் இவ்விகத் தேனில் ஒரு சொட்டெடுத்து ஒரு காகிதத்தின்பேரில் வைத்து ஊதினால் அது உருண்டோடும். அதுவே சிரேஷ்டமான தேன்.

டி. ஸி வேங்கிடரமணஐயர்.

---

## குழந்தைகளை வளர்த்தல்.

---

தாயின் வயிற்றில் கருப்பையில் நாதமும் விந்துவும் கலந்தபின்பு நீர்க்குமிழிபோல் முதலிற்றோன்றி பிறகு அது பரிணாம மடைந்து பத்துமாதம்வரை வளர்ந்து பூமியில் குழைந்தையாகப் பிறக்கின்றது.

இவ்வாறு பிறந்தபின்பு அதற்கு நோவணுகாதபடி காரசாரங்களும் எண்ணெயுங் கொடுத்து வளர்க்கிறார்கள். இது தாயின் பொறுப்பாகின்றது. தாயின் முலைப்பால் தான் குழந்தைக்கு ஆரம்பத்தில் முக்கிய உணவாகின்றது. பால்குடிக்கும் குழந்தைகளின் தேகசவுக்கியம் தாயின் தேகசவுக்கியத்தைச் சார்ந்ததாகின்றது. தாயின் முலைப்பாலும் சுத்தமாயும் நல்ல சத்துள்ளதாயுமிருக்கத் தாயின் சரீரம் திடமாய் நோயற்றிருத்தல் வேண்டும்.

தாயின் சரீரம் இளைத்து நோய்கொண்டதாயிருக்குமாயின் குழந்தைக்கு முலைப்பாலிராது. அப்பொழுதுதான் முலைப்பால்காரியிடம் குழந்தையைக் கொடுத்துப் பால் கொடுப்பிக்கின்றார்கள் அவளும் நோயற்றவளாயும் சுத்தமுள்ளவளாயுமிருந்தால் குழந்தைக்கு நோய் தட்டாது.

கோபதாபமும் மனக்கவலையும் முரட்டுத்தனமும் இருக்குமாயின் தாய் முலைப்பால்காரி இவர்களின் முலைப்பாலின் குணம்மாறிவிடுகின்றது. குழந்தையும் முரடாயும்

நோயுள்ளதாயும் மாறிவிடுகின்றது. பிறந்தது முதல் தாயின் முலைப்பால் குடியாத குழந்தையினிடத்துத் தாய்க்கன்பிருக்கமாட்டாது. அக்குழந்தைக்கும் அப்படியே தாயினிடம் அன்பிராது. முலைப்பால்காரி விஷயத்திலும் இந்த நியசயம் கண்டுகொள்ளலாம்.

“பீரம்பேணி பாரந்தாங்கும்”

என்பது ஔவைப்பெண்மணியின் நீதிவாக்கியம். அதிகமாகத் தாயின் பால் குடித்த குழந்தை பிறகு அதிக பாரங்களைத்தாங்கும், பலமுள்ளதாகும் என்பதுதான் இவ்வாக்கியத்தின் பொருள். இதனால் ஆண் பெண் குழந்தைகளின் பலம் தாயின் முலைப்பாலினாலுண்டாகின்றது. சில குழந்தைகள் நல்ல திடமுள்ளதாயும் வேறு சில குழந்தைகள் பூஞ்சையாய் மெலிந்து மிருந்துவந்து பிறகு ஆயுள் நாள் முழுவதும் அதேமாதிரியாயிருப்பது தாய்முலைப்பாலின் குணத்தாலும் குறைவாலுந்தான்.

குழந்தைகள் பிறக்குங்கால் நோயில்லாதிருக்கத் தாயாரும் தகப்பனாரும் நோயில்லாதவர்களாயிருத்தல் வேண்டும். அப்படி நோயில்லாதவர்களாயிருந்தாலும் தாய் தன் வயிற்றில் கருத்தங்க ஆரம்பமானதை யுணர்ந்துகொண்டதுமுதல் தனது சரீரத்தை வெகு ஜாக்கிறதையாய்ச் சீதோஷணங்கள் மீராதபடி காப்பாற்றிவருவதோடு கோபதாபங்களும் மனோசஞ்சலமும் பிடிவாதமும் சாகஸமுமான காரியங்கள் செய்யாமல் வீட்டுக்காரியங்களைமட்டும் நேரில் எப்பொழுதும் போலப் பார்த்துவரவேண்டும். ஐந்தாவது மாதம் முதல் கிணற்றில் தண்ணீர் சேந்துதல், அதிக பாரத்தைத் தூக்கல், ஏணியிலோ மேடான உயர்ந்த இடங்களில் நெடுநேரம் களைப்படையும்படி வருதலோ செய்தல் பெரும்பிழையாம். மனச்சந்தோஷத்துடன் தன்னாலியன்றமட்டும் வீட்டுக்காரியங்களைச்செய்துவருதல் வேண்டும். மன நிலையும் உல்லாசமான போக்கும் உள்ளவரையிருந்த பெண்களுடைய கருப்பத்தில்தான் அதியூகமும் விவேகமும் தீர்க்காயுவுமுள்ள பிள்ளைகள் பிறக்கும். தாய் தகப்பன்மார் உலகவழக்கப்படி பிள்ளைகளுக்குச் சொத்தை ஏராளமாகச் சம்பாதித்து வைத்திருந்தாலும் அதைச் சரீரதிடத்தோடு அப்பிள்ளைகள் ஆண்டனுபவிக்க நோயில்லாத தேகமுடையவர்களாயிருத்தல் வேண்டும். பிதுரார்ச்சிதமாயோ மாதுரு ஆர்ச்சிதமாயோ நோய்களும் குழந்தைகளின் சரீரத்தில் கருப்பையிலிருக்குங் காலந்தொடங்கி சேர்த்து வைக்கப்படுமானால் குழந்தைகள் சரீரத்தில் வேரூன்றிய நோயெனுஞ் சொத்தையனுபவித்ததால் மற்றையஸ்தாவர ஜங்கம சொத்துக்களை அனுபவிக்க வகையின்றிச் சீக்கிரம் யமன் ஓலைக்கு ஆளாய்விடுகிறார்கள்.

நோயற்ற சரீரமும் நல்நடத்தையும் மனச்சாந்தமும் சரீரசுத்தமுமுள்ள தாயார் தகப்பனார்களுக்குப் பிறக்கும் குழந்தைகள்தான் உலகத்தில் வெகு கீர்த்தியோடு கல்விமானென்றும் நீதிமான் என்றும் மகாவீரனென்றும ஞானியென்றும் யோகியென்றும் குருவென்றும் மதியூகமுள்ள மந்திரி என்றும் எல்லாராலும் கொண்டாடப்படுகின்றார்கள். இந்த நயமுணராது நம்மவரிற் பலர் பாலியத்தில் பலநோய்களைத் தாமாகவே உண்டாக்கிக்கொண்டு தங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கும் அதை ஓட்டுவித்து மிகவும் பரிதாபமுள்ள ஸ்திதியிலிருக்கும்படி செய்கிறார்கள். இதைக் கவனிப்பாரானால் நமது நாட்டில் பல நற்குழந்தைகள் பிறந்து பல பதிவிரதைகளுந நன்னடக்கையுள்ள புருடர்களும் உண்டாவார்கள், சகலமும் வினைப்பயன் நம்மால் ஒன்றுமில்லையென்று குவாதம் செய்பவர்களுக்கு நாம் இதை எழுதவில்லை. நம்மிடம் லோகநாயகன் அமைத்துள்ள கருவிகளை நல்வழிப்போக்கில் ஸாத்தியப்படும்வரை கொஞ்சம் கொஞ்சமாய்ச் சீராய் உபயோகிப்போமாயின் நமதடம் நன்மையே உண்டாம். நன்மை விதைத்தால் நன்மை விளையும் தீமை விதைத்தால் தீமை விளையும் என்பதை நம்புமவர்க்கே நாமிதுணர்த்தினோம்.

சரீரத்தை நோயணுகாது காத்துவந்து மெய்யறிவைப் பெற்று விளங்கும் நாயகன் நாயகிமார்கள் நல்ல பிள்ளைகளைப் பெற்று வைப்பது உலகோர் செய்த புண்ணியமேயாம். கணவனையன்றி வேறு தெய்வமில்லையென்று நம்பித் தன் சரீரத்தைச் சுத்தமுள்ளதாய்ச் சாகும்வரையுப் பாதுகாத்துச் சுகமளித்துவரும் நற்பெண்டிர்கள் கிடைக்கப்பெற்ற இல்லறத்தான் மனம் தீயவழியை ஒருநாளும நாடாது. இதை நமது நாட்டில் இக்கலிநாளில் பெண்கள் முதல் முதலில் கவனித்தல் வேண்டும். ஆடவர்களை நியாய வழியால் வசீகரிக்கும் பெண்கள் நமது நாட்டில் மிகுவார்களானால் ஆடவர்கள் நல்வழிகொள்வார்களென்பது சொல்லவும் வேண்டுமோ.

குறள்.

“பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.”

(தொடர்ச்சியுண்டு)

ஸென்-தோம் கல்விச்சாலை. } தி. வேங்கடராம ஐயங்கார்.